# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

Vol. 12 No. 12

20-4-41







பயங்கரப் பார்வை.



2 ANNAS

# SWADESAMITRAN
ILLUSTRATED WEEKLY




மூன்று தலை முறைகள்.

தாய் தன் மகளுக்கு
வுட்வார்ட் வைத்தியனின்
கிரைப் வாட்டர் என்னும்
மருந்துத் திராவகம்
எப்படி குழந்தைக்கு சுகம்
தருகிறதென்று சொல்லுகிறாள்.

# WOODWARD'S GRIPE WATER

W. WOODWARD LTD., LONDON ENGLAND



கல்கத்தா சர்வகலாசாலையில் விசேஷ பட்டமளிப்பு விழா.

1921-ல் கல்கத்தா சர்வகலாசாலை பல கலா நிபுணர்களுக்கு டாக்டர் பட்டமளித்து கௌரவித்தது. மேலே இருப்பது அப்போது எடுத்த படம். (உட்கார்ந்திருப்பவர்) இடதிருந்து:-ஸர் வில்லியம் போப், ஸர் ஜான் மார்ஷல், மே. த. ரெடிங் பிரபு, (வைஸ்ராய்) மே. த. ஜெட்லண்ட் பிரபு. (கவர்னர்) ஸர் ஆசுதோஷ முகார்ஜி, புரொபஸர் ஸில்வெ லெவி, வில்லியம் க்ரெயிகி, டி. என். ஸென். (நிற்பவர்) இடதிலிருந்து; டி. ஆர். பந்தார்க்கார், ஆர். பி. பராஞ்ஜ்பே, மஹாமஹோபாத்யாய ஆர். சாமா சாஸ்திரி, திவான்பஹதூர் எஸ். கே. அய்யங்கார், ஸர் எம். விச்வேஸ்வரய்யா, ஸர். பிரஜேந்திரநாத் ஸீல். ஸர். கிலபர்ட் வாக்கர், ஸர் ஸி. வி. ராமன், ஸ்ரீ அவனீந்திர நாத் டாகூர்.

# "இன்னொரு பிறப்பு வாய்த்தால்..."

திவான் பஹதூர் டாக்டர்

## எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்

எழுதியது

**இந்து தேச சரித்திரத்தில் - முக்கியமாக தென்னிந்திய சரித்திரத்தில் - திவான் பஹதூர் டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் நிகரற்ற நிபுணர். சமீபத்தில் பம்பாய் கவர்னர் ஸர் ரோஜர் லம்லி குறிப்பிட்டபடி இவர் எழுதிய புஸ்தகங்கள் மற்றவர்களுக்கு வழிகாட்டி வருகின்றன. இப்போது அநேகர் ஆராய்ச்சியில் இறங்கி யிருக்கின்றனர் என்பதற்கு இவரது உழைப்பே காரணம். நம் "மித்திர"னுக்காக எழுதியிருக்கும் கட்டுரையில் நேயர்கள் அவர் இந்து சரித்திர ஆராய்ச்சியில் எப்படி ஈடுபட்டார் என்பதை உணருவார்கள். இம்மாதம் 23-ம் தேதி இவரது 70-ம் ஆண்டு பூர்த்தியாவது பற்றி கட்டுரையின் முற்பகுதியை இப்போது பிரசுரிக்கிறோம்.**

இன்னொரு பிறப்பு வாய்ப்பதேயாயின், எத்தகைய வாழ்வு உங்களுக்குச் சம்மதமென்று கேட்போர்க்கு அனேகவிதமான உத்தரம் சொல்லலாம். அனுபவ சித்தமான பதில் வேண்டினால், இப்பிறப்பு நிகழ்ச்சிகளிலுண்டான லாபா லாபங்களையும் ஜயாபஜயங்களையும் எடுத்துக்காட்டுவது ஒருவாறான பதிலேயாகும். நம் வாழ்நாளைக் கழிக்க எவ்வாறான முயற்சிகள் செய்தோமோ, அதுவே நம் மனோபாவத்தைச் சரிவரக் காட்டும். அம்முயற்சிகள் எத்துணை நிறைவு பெற்றனவோ அவ்வளவு நம் எண்ணம் ஈடேறிற்றென்று சொல்லலாம். நிறைவு பெறாதவளவு நம் வாழ்வின் நிகழ்ச்சியில், நம்மாயத்தமெவ்வளவென்றும், வேறாயத்தமெவ்வளவென்றும் நன்கு விளங்கும். இப்பிற்பட்ட நடப்புக்கு மூலம் தெய்வமா, அல்லது விதியா, அல்லது அகஸ்மாத்தான நிகழ்ச்சியா என்பது அவரவர்கள் மதக் கொள்கைகளையொட்டியதாகும். எவ்வாறான மதிப்பு பெற்றாலும் நிகழ்ச்சியொன்றே முக்கியம்.

### சென்ற தாது வருஷம்

எனக்கு இப்பொழுது ஞாபகத்துக்குக் கிடைக்கும் விஷயம் சென்ற தாது வருஷத்துக்கு முந்திய தாது வருஷத்தில் ஸம்பவித்த பஞ்சம். அவ் வருஷம் மழையற்றுப் பயிரற்றுப் பிராணிகள் சின்னா பின்னமாய் சிதறுண்டு தவித்துப் போயினர். இது எவ்வாறென்று முடிவு பெற எனக்கு அக்காலத்திலொன்றும் தெரியாது. எங்கள் வீட்டின் எதிர்ப்புறத்தில் தெருவோரத்தில் சில புற்றுக்களிருக்கும். அதில் பாம்புகள் வந்து குடியேறாதபடி பாதுகாக்க வேண்டிய காரியங்களை, அப்போதைக்கப்

போது செய்வது தவிர வேறு விதமானவற்றைக் கவனிப்பதில்லை. இப்பஞ்ச காலத்திலிரண்டு நாள் காலையிலெழுந்து ஆற்றங்கரைக்குப் போகப் புறப்பட்டால், இப்புற்றைச் சுற்றி எட்டுப் பத்துக் கணக்கில் செத்துக் கிடக்கும் மனிதர்களை கண்ணுற்ற ஞாபகம் அழியாமலிருக்கிறது இப்படிப் பஞ்சத்திலடிபட்ட ஜனங்கள் வந்தால் எவ்வளவு வேண்டினும் ஒரு சிறிதும், மனதுஇளகிவிடாமல் பாதுகாத்துகொண்டு மாட்டுத் தொட்டியில் வற்றாமல் வைத்திருக்கும் கழுநீரை ஒருக்காலுங் கொடுக்க வேண்டாமென என் தகப்பனார் தடைப்படுத்தினார். அன்று தோறும் அக் காட்சி காணப்படவில்லை. சில நாள் சென்ற பிறகுஎங்களையெல்லாம் ஆற்றுப்பாலந்தாண்டி அக்கரையில் வெகுதூரம் போக வேண்டாமென்று சொல்லியிருந்தார். சாதாரணமாக விளையாட்டுக் காகவாவது வேலையாகவாவது, நாங்களெல்லோரும் போவது வழக்கமுண்டு. ஒருமைல் தூரத்துக்குள்ளேயே கும்பகோணம் ரயில்வே ஸ்டேஷன்; அதற்கடுத்தாப்போல் பட்டணம். கீழ்புறம் சிறிது தூரத்தில் ஒரு கிராமமுண்டு. இந்த நிர்ப்பந்தம் ஏன் விதித்தாரென்று இரண்டு மூன்று நாளில் தெரிந்தது. பாலத்திலிருந்து முக்கால் மைல் தூரத்தில் ஒரு பெரிய மைதானத்தில் பெரிய கொட்டகையொன்று பஞ்சத்திலடிபட்டு வரும் ஏழை ஜனங்களுக்கு உணவு வழங்க கஞ்சித்தொட்டியென்று ;பெயரிட்டு, பிள்ளை போஜனசாலையொன்று கட்டியிருந்தனர்; சிறு பிள்ளைகளங்கே போய்க்கோலாகலத்தைப் பார்க்க வேண்டாமென்றே தடைப்படுத்தினர் போலும். ஆனால் எங்கள் கூட்டத்தில் நானும் மற்றொரு பையனும் தைரியப்படுத்திக்கொண்டு ஓரே யோட்டமாய் யோடி சிறிது தூரத்திலிருந்து கண்ணுக்குக் கிடைத்ததைப் பார்த்து வந்தோம். பெரியகொட்டகையும் அதில் நடமாடும் சில வேலைக்காரர்களுக்கும் தான் எங்களுக்குக்காண கிடைத்தது.

## படிப்பு

இதற்கடுத்த வருஷமோ அல்லது இரண்டாவது வருஷமோ எங்கள் வீட்டுக் கெதிர்ச் சாகு ஒரு வீட்டுத் திண்ணையில் வையாபுரிப் பிள்ளையென்றொருவர் பள்ளிக்கூடம் வைத்திருந்தார். அதில் எனக்கு நேர் தமையன் படித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள்காலை எட்டு அல்லது ஒன்பது மணிக்கு என்னை யழைத்துப் போனார். உபாத்தியாயர் சந்தோஷமாய் வரச்சொல்லி அ, ஆ, முதல் உயிரெழுத்துக்களைச் சொல்லி அவைகளை யெல்லாம் நன்றாய் எழுதின பிறகு தான் சாப்பாட்டுக்கு விடுவதாய்க் கடுமையான உத்தரவளிப்பார். அவசரம், கோபம் முதலிய குணங்களில்லாவிடினும் அவர் கொஞ்சங் கடுமையான வாத்தியாரென்றுதான் பெயர் பெற்றவர். எனக்குக் கொடுத்த பாடத்தை அரை மணிக்குள் எழுதிக் காண்பிக்கவே சட்டாம்பிள்ளைமுதலானவர்கள் அவரிடம்அதிசயத்தை தெரிவித்தார்கள். அவர் முகமலர்ச்சியுடன் ‘உனக்கின்றைக்குப் பாடம் போதும். நீ வீடு போகலாம். நாளை காலையில்வரவேண்டும்’ என்றார். அந்தப் பள்ளியில் ஒரு வருஷமிருந்து எழுதப் படிக்கவும், எண்சுவடி கணக்குப் போடுவதில் சுருசுருப்பும் உண்டாயிற்று.

அப்பள்ளி ஏதோ காரணத்தால் நின்று போகவே அக்கிரகாரத்துக் கீழண்டைத் தெருவில் ஒரு நாயுடு பள்ளி வைத்திருந்தார். அவருக்குக் காலிரண்டும் முழங்காலுக்குக் கீழ் ஸ்வாதீன மற்றபடி இரண்டு கழுக்கட்டையிலும்கோல் வைத்துக் கொண்டு நடமாடுவார். நொண்டி வாத்தியாரென்று தான் அவர் பெயர் வழங்குவது. சாது; படித்த மனிதர். நானும் இன்னும் மூன்று பிள்ளைகளுமாகப் பள்ளி :முழுதும் நடத்துவது. எழுபது எண்பது பிள்ளைகளிருப்பார்கள்; ஐந்தாறு பெண்பிள்ளைகள்: காலை முடியவும் பிற்பகல் இரண்டு மூன்று மணி வரையும் எங்களுக்கு உத்தியோகம். மூன்று மணியிலிருந்து உபாத்தியாயர் எங்கள் நால்வருக்கும் பாடம் சொல்லுவார். இது சுமார் இரண்டு வருஷகாலம் நன்றாக நடைபெற்றது. அடுத்த வருஷம் வாந்திபேதி அமளியில் பள்ளி உடைந்தது; எங்கள் நால்வரில் இருவரிருந்தனர்; அதனோடு என் படிப்பும் நின்று போயிற்று. ஆனால் தமிழ்ப் புத்தகங்களை நன்றாய்ப் படிக்கவும் படித்ததை சற்றேறக் குறைய தெளிவாயறிந்து கொள்ளவும் வேண்டிய: பிரவேசம் கிடைத்திருந்தது.

## புராணம் வாசித்தல்

எங்கள் வீட்டுத் திண்ணையில் ராத்திரி தோறும் ராமாயணமோ, அல்லது பாரத பாகவதாதிகளில் ஏதேனும் ஒன்று படித்துவருவார்கள். ஒரு தமிழ்ப் பண்டிதர் அதற்கு அர்த்தத்தை நன்றாகச்சொல்லி எல்லோருக்கும் தெரியச் செய்வார். இவைகளைப் படிக்க நல்ல சாரீரமுள்ள ஒரு மிராசுதார், தவறினால் மற்றொருவருண்டு. இவர்கள் முடியாவிட்டாலும், சில நாள் அவகாசப்பட்டாலும் நான் படிப்பதுண்டு. மற்ற வேளைகளில் என் தகப்பனாருக்கு மாத்திரம் படிப்பேன். இதுதான் தமிழ்ப் பயிற்சிக்குக் காரணம்.

இவ்வாறு ஒன்றிரண்டு வருஷங் கழிந்த பிறகு அக்கிராமத்துப் பிள்ளைகளின் இங்கிலீஷ் பயிற்சிக்காக முக்கால் மைல் தூரத்திலுள்ள கழுதைத் தோப்பில் கிருஸ்தவ மத போதகர் பங்களாவில் ஒரு சிறு பள்ளி ஏற்பாடு செய்தார்கள். சில மாதங்களானவுடனே தினம் விட்டு தினம் ஜ்வரம் எனக்கு வரத் தொடங்கிற்று. மத்தியானத்துக்கு மேல் வரும். அங்கேயே படுத்திருந்து சாயங்காலம் மற்ற ஐந்து பேர்கள் என்னைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டுப் போவார்கள்.

இப்படியாக ஒரு ஆறுமாத காலம் படிப்பு நடந்தது. ஜ்வரமிறங்காததால் என்னைப் பள்ளியினின்றும் நிறுத்திவிட்டார். ஒரு வருஷம் கழித்து கும்பகோணம் டவுன் ஹைஸ்கூலில் சேர்த்தார்கள். ஆயினும் படிப்பு சரிவா



பெங்களூர் மிதிக் சோஸைட்டி:— இதை ஸ்தாபித்தவர்களுள் திவான் பஹதூர் அய்யங்காரும் ஒருவர். படம் 1912-ல் எடுக்கப்பட்டது. (படத்தில் உட்கார்ந்திருப்பவர்) இடதிருந்து ரெவரெண்டு எப் குட்வில், மிஸ்டர் வார்பர்டன் ஐ. ஸீ. எஸ், ரெவரெண்டு எ. எம் டபார்ட், மிஸஸ் ரிச்சர்ட்ஸ், மிஸ்டர் எப் ஜே. ரிச்சர்ட்ஸ் ஐ ஸி. எஸ், ஸ்ரீ வி பி. மாதவ ராவ், மிஸ்டர் ஜி. எச். க்ரும்பீகள், மஹா மஹோபாத்யாய ஆர். நரசிம்மாச்சாரியார். (நிற்பவர்) இடதிருந்து: திவான் பஹதூர் அய்யங்கார், டாக்டர் இ. பி. மேட்காப், டாக்டர் பி. எஸ். அச்யுதராவ், மிஸ்டர் எப். ஆர். ஸேவ்.

நடக்குமோ என்பதில்மட்டும் ஐயம். இந் நிலையில் என் ஜாதகத்தை அயலூரில் வசிக்கும் ஒரு ஜோஸ்யரிடம் காண்பித்ததில் அவர் நன்ருகப் பரிசோதனை பண்ணிக கணக்கிட்டு இந்தப் பிள்ளைக்கு இங்கிலீஷ்பயிற்சி பயன்படாது. ஸம்ஸ்கிருதப் பாஷையில் தீவ்ர புத்தி இருக்குமென்று சொல்லிவிட்டார். ஜோஸ்யரேயன்று; நன்ருய்ப் பழகியவர். அவர் ஜோஸ்யம் அனுபவத்துக்கிணங்கியே இருந்தது. எங்கள் வம்சத்தில்இருதிறத்தாரும்வடமொழிப் பயிற்சியில் பெயர் வாய்ந்தவர்களென்று சொல்லலாம். எங்களுடைய தாயார் வம்சம் பெயர்போனது. எனக்கு அம்மான் ஒருவர் வடமொழிப்' பள்ளியொன்றை ஏழெட்டு மைலிலுள்ள ஒரு பெரிய ஸ்மார்த்த அக்கிரகாரத்தில்நடத்திவந்தார். அங்கே அனுப்புவது உசிதமான காரியம. அவ்வருஷத்திய காலராக் கொள்ளையில் என் அம்மான் சம்சாரமும், எனக்கு சம வயதுள்ள அவர் பிள்ளையும் நஷ்டமானுர்கள். கலியாணமாயிருந்தபெண்ணை அவள் புக்ககத்துகனுப்பிவிட்டுத் தானும் ஒரு பிள்ளையுமாய் சம்சாரம் நடத்தி வந்தார். அங்கு என்னை அனுப்ப இஷ்டமில்லாததால் என் காலம் வாளாவே கடந்து வந்தது. திண்ணைப் படிப்புத் தவிர வேறில்லை. ஏதோ வீட்டு வேலையிலும், நிலம் நீர் பார்ப்பதிலும் சிறிது மட்டும் ஒத்தாசை செய்வதுண்டு. இந்நிலைமையில் எனக்கும் என் தமையனுக்கும் உபநயனம் செய்வித்தார்கள். அடுத்த வருஷம் எங்கள் தகப்பனுர் காலகதி அடைந்தார். சம்சாரம் நடைபெறுவது கடினமாகிவிட்டது.

## தமயனுக்கு எழுதியது

இத்தருணத்தில் பெரிய தமையனுக்குப் பெங்களூரில் ஒரு நடுத்தரப் பள்ளிக்கூடத்து முதல் வாத்தியார் வேலை கிடைத்தது பாதிக் குடும்பம் பெங்களூரிலும் பாதி ஊரிலும் நடந்து வந்தது. என் தமையன் பிரவேச பரீட்சைக்குப் படித்து வந்தான். அவனேடு கூட என்னையும் படிப்புக்கு அனுப்புவது முடியாமல் போயிற்று. என்ன செய்யப் போகிருர்களென்று தெரியவில்லை. என்ன செய்யச் சொல்லலாமென்றும் தோன்றவில்லை. நாங்களிரண்டு மூன்று பையன்களாகச் சேர்ந்துகொண்டு தஞ்சாவூருக்கடுத்த ராஜா மடம் போய் ஸம்ஸ்க்ருத பாடசாலை சேர்ந்து வாசிப்பதென்று தீர்மானித்துக்கொண்டு இதை என் தமையனுக்கெழுதியனுப்பினபோது, "இங்கிலீஷ் படிப்புக்கே தேனும் வழியுண்டேயானுல் இன்னொரு முயற்சி செய்யத் தயாராயிருக்கிறேன். இல்லாவிடில் ராஜா மடம் போகத்தீர்மானம்' என்று தெரிவித்தேன். இன்னுமிரண்டு மூன்று மாதங்களுக்குள் உங்களையெல்லாமிங்கேயேயழைத்து வாயோசித்திருக்கிறேன், அது தவறினுல் வேறுயோசனை செய்யலாம் என்று பதில் வந்தது. 1884ம் வருஷம் பிப்ரவரி மாதம் பெங்களூர் போய்ச் சேர்ந்தேன்.

## படிப்புப் பிரச்னை

அப்பொழுதும்கூட இவனுக்கு இங்கிலீஷ் படிப்பு முடியுமாவென்பதே யோசிக்க வேண்டிய முக்கிய விஷயமாயிருந்தது. பள்ளிக்கழைத்துப் போய்த் தமிழ்ப் பண்டிதர் வகுப்பிலுட்கார்த்திவைத்துப் பத்துப் பதினைந்து நாள்களும் சென்றன. வீட்டில் கார்கவெய்ட் முதல் ரீடர் பாடஞ்சொல்லி வைத்தார்கள். பதினைந்து பாடம் நடந்தேறிற்று. எனக்கிளையவன் ஒரு வருஷம் முன்னதாகப் படித்தவன். மூன்ரும் வகுப்பேறியிருந்தான். அது பற்றி என்னை சந்தேகத்தோடு இரண்டாம் வகுப்பில் சேர்த்தனர். ஒரு மாத காலம் வகுப்போடு கலந்து வருவது கஷ்டமாகவே இருந்தது. பின்னேரிரண்டு மாதங்களில் ஸென்டிரல் காலேஜ் ப்ரொபஸர் வெங்கடஸ்வாமி நாயுடு என்பவர் பள்ளிக்கூடமெல்லாம் பரீட்சித்துப் பார்த்தார்; இந்தப் பையன் இரண்டாம் வகுப்புக்குப் பெரியவன் போலும் என்று சொல்லிப் பரீட்சையில் கூடியமட்டுந் தாழ்வில்லை என்றுஞ் சொல்லிப்போனுரும். இங்கிலீஷ் ஒன்றுதான் கொஞ்சம் கடினமாகவிருந்தது. ஆயினும் வருஷக் கடைசியில் நான் இரண்டாவதாக நின்றேன். மேல் வகுப்புக்கு மாற்றுவோரைப் பொறுக்கியெடுக்கும் சமயத்தில் அக்கலாசாலைக் கன்னடம் தெலுங்கு வாத்தியார், முதல் இரண்டாவதான எங்களிருவரிடமும் வந்து உங்களிருவரையும் நான்காவது வகுப்பில் போட்டால் படிக்க முடியுமா என்றும் முடியாவிட்டால் மூன்ரும் வகுப்புக்கு வாச் சம்மதமா என்றும் கேட்டுக்கொண்டு பெருமுயற்சியோடு எங்களை நான்காம்



திவான் பஹதூர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்.

வகுப்பில் சேர்த்தனர். அது முதல் எனக்கும் என்னேடு வந்த இன்னொருவனுக்கும் வகுப்பு முதலிடத்துக்குப் போட்டி ஏற்பட்டு அனேக நாள்களில் சண்டை உண்டாகி முதல் பரீட்சை முடிந்தவுடன் அவன் வேறு பள்ளிக்குப் போய் விட்டான். அது முதல் நானும் என் தம்பியும் முதலிரண்டாவதாக நின்றபடி வருஷம் முடிந்தது. இதுவரைக்கும் என் படிப்பு விஷயத்தில் எங்கள் வீட்டுப் பெரியோர் நினைத்தது சிறிது தூரம் படிப்பு முடிந்தவுடன் சிறிய இன்ஜினீயர், அல்லது டிராப்ட்ஸ்மன்வேலைக்கு அனுப்பும் ஏற்பாடொன்றேதான். இவ்வெண்ணம் இப்போது முதல் புரட்சி பெற்றது. மறுவருஷம் மத்திய பரீட்சை முதற் பகுதியிலும், அடுத்த வருஷமே ப்ரவேச பரீட்சையிலும் தேர்ச்சியடைந்து காலேஜ் சேர்ந்தவுடன் முழுதும் மாறுபட்டு இன்ஜினீயர பரீட்சைக்குப் படிக்கவே ஏற்பாடாகியது. காலேஜ் படிப்புக் கணக்குப் படிப்பவனை வேண்டாமென்று மறுத்து, இயற்கை நூல் அல்லது பௌதீகம் படிக்க வேண்டுமென்று ஒரு வாத்தியார் நிர்ப்பந்தத்தினுல் தீர்மானிக்கப்பட்டது. இதுகாறும் படிப்பிலுங்கூட நம் நோக்கமொன்று, நடைபெற்று முடிந்தது வேறென்பது, நன்கு விளங்கும்.

## கலாசாலையில் நியமனம்

இதற்கடுத்தபடி பி. ஏ. பரீட்சையில் தேறி இஞ்சினீயர் படிப்புக்கே போவதெனும் தீர்மானமே நிலைத்து எங்கள் வகுப்பில் படித்தவர்களில் மற்றிருவரையும் என்னையும் தேர்ந்தெடுத்து சர்க்காரின் போஷணைக்குச்சிபார்சு செய்து வேறொருவரும் போட்டி வாராமல் காலேஜ் முதல் உபாத்தியாயர் ஏற்பாடு செய்தார். இதற்காகக் காக்கவேண்டிய காலம் கணக்குப் பயிற்சியிலே நடத்திவருங்கால் ஸர்க்காரதிகாரிகள் என்னைத் தவிர மற்றிருவர்களையும் மற்றொரு பி. ஏ. படிக்காதவனையுமனுப்பவே அன்னேக்கம்தவறுண்டது. இக்காலத்திலேயே காலேஜ் உபாத்தியாயரொருவர் நோயடைந்து ஒரு மாதம் லீவுபெற்றனர். புஸ்தகங்களுக்காக அடிக்கடிகாலேஜுக்குப் போய்க்கொண்டிருக்கும் என்னை வீண் காலம் போக்குவதைக் காட்டிலும் ஒரு மாத காலம் இந்த உபகாரத்தை செய் என்று அக்காலத்திய அத்யக்ஷகர் ஏவினர். ஒன்றிலிருந்து அது ஆறுமாதமாக வளர்ந்து முடிவு பெற்றது. மதராஸ் வந்து சட்டப் பரீட்சைக்குப்படிக்க ஏற்பாடுகளைச் செய்துகொண்டு தகப்பனுர் வருஷக் கடமைக்காக ஊர் போய்ச் சேர்ந்தேன். ஒரு நாள் சாயங்காலம் காலேஜ் வாத்தி முதல்வரைக் கண்டபோது அவர் அப்போதுகாலேஜில் மற்றொரு வேலை ஏற்பட்டதாகவும் நான் முன்பு செய்த நல்ல வேலைக்கு என்னை நியமிக்கத்தான் தீர்மானஞ் செய்திருப்பதாகவும் அதிக சம்பளங்கொடுக்கச் சிபார்சுசெய்திருப்பதாகவும் சொல்லி உடனே பதில் வேண்டுமென்ருர். இரண்டு நாள் அவகாசம் பெற்றுக்கொண்டு, வீட்டாரையும் நண்பர்களான பெரியோரையும் கேட்க அவர்களெல்லோரும் ஒரு முகமாய் அவ்வேலையையே அங்கீகரிக்க வேண்டுமென்று நிர்ப்பந்தித்தார்கள். பள்ளிக்கூடத்து உவச்சத் தொழில் அப்படி நேர்ந்தது. இது இரண்டாம் புரட்சி. இதே மஹான் அடுத்த வருஷம் ஜியாலஜி (பூதத்துவ சாஸ்திரம்) இலாகாவுக்காகசிலர்தயாராகவேண்டுமென்றும், அதற்குத்தேர்ந்தெடுக்க ஒருபரிட்சை ஏற்பாடு செய்திருப்பதாகவுஞ் சொல்லி அதற்கு வேண்டிய சௌகர்யங்களையெல்லாம் தானே ஏற்படுத்திக்கொடுத்துப் பள்ளித் தொழிற்சாலையில் வசதிசெய்து கொடுத்தனர். பரீட்சை காலத்துக் கணுகிய இரண்டுமூன்று மாதங்கள் படிப்புக்குமுடியாத அஸந்தர்ப்பங்கள் நேர்ந்து பரீட்சைக்குப் போகவொண்ணுமற் செய்துவிட்டது.

## இதர யத்தினங்கள்

இது தொடங்கி உபாத்தியாயத்தொழில் தான் எனக்கு என்று நான் தீர்மானித்

—அடுத்த பக்கம் பார்க்க

# திரை கடலின் திரவியங்கள்

★ ★ "குமார குரு"

**இந்த வாரம் "குமார குரு" மற்றொரு அரிய விஷயத்தை விளக்க முன் வந்திருக்கிறார். கடலில் அகப்படும் விலையுயர்ந்த சில பொருள்களைப்பற்றியும் மற்றும் இதர சில வஸ்துக்களைப்பற்றியும் அவர் எழுதியிருக்கிறார். முத்துச்சிப்பி, பவளம் இவற்றைப்பற்றி நீங்கள் இப்போது பல உண்மைகளை அறிவீர்கள். உங்களுடைய ஞானம் அபிவிருத்தியடையும்; பாலர் முதல் பெரியோர் வரை இந்தப் புதிய விஷயங்களைப் படித்து ரஸிப்பது திண்ணம்.**

ஆழ்கடலின் விந்தைகள் அநேகம். இவைகளில் அநேகம் நமக்குத் தெரிந்த போதிலும் இன்னும் பெரும்பான்மை நம் அறிவுக்கு எட்டாததாகவே இருக்கின்றன. இமயமலைதான் உலகத்தில் பெரிய மலை என்று நாம் எண்ணியிருக்கிறோம். ஆனால் இந்த இமய மலையைவிட இன்னும் பெரிய மலைகள் சமுத்திரத்தில் ஆழ்ந்திருக்கின்றன என்று தெரிய வருகிறது. கண்ணுக்குத் தெரியாத ஜீவராசிகளும், பிரம்மாண்டமான திமிங்கிலம் முதலிய மீன் வகையறுக்களும் கடலில் வாழ்கின்றன. இவைகளைப்பற்றி மற்றொரு சமயம் விஸ்தரித்து எழுதுகிறேன். ஆனால் இங்கு வேறு சில விஷயங்களைக் கவனிப்போம்.

கடலைப்பற்றிப் பேச ஆரம்பித்தால் முத்துச் சிப்பிகளைப் பற்றிப் பேசாமலிருக்க முடியாது. விலை உயர்ந்த இந்த ஆபரணங்கள் முத்துச் சிப்பிகளிலிருந்து எடுக்கிறார்களென்று அநேகமாக எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் இந்த முத்துச்சிப்பி என்ன, அது ஜீவராசியைச் சேர்ந்ததா, அல்லது ஜட வஸ்துவா என்று அநேகருக்குத் தெரியாது. முத்துச் சிப்பி கடலில் வாழும் அநேக கோடி விதம் விதமான ஜீவப் பிராணிகளில் ஒன்று இது. ஆரம்பத்தில் கடுகு பிரமாணம் இருந்த போதிலும் நாளடைவில் பெரிதாகிக் கொண்டே வந்து கொஞ்ச வருஷங்களுக்குள் ஒரு அங்குலம் அல்லது இரண்டங்குலம் அளவுக்குப் பெரியதாகி விடுகின்றது. நாம் பார்க்கும் சிப்பிகள் இப் பிராணிகளின் மேல் ஓடு. இந்த ஓடுகளுக்கிடையே தான் ஜவ்வு போன்று இந்தப் பிராணி இருக்கும். இதற்கு ஈரல், இருதயம் முதலிய அவயவங்களுண்டு. ஆனால் இந்த முத்துச் சிப்பிகள் இங்குமங்கும் சஞ்சரிக்காமல் கடல் பாறைகளிலேயே ஒட்டிக் கொண்டிருக்கும். இப்படி ஒரே இடத்திலிருந்தால் இவைகளுக்கு ஆகாரம் எப்படிக் கிடைக்குமென்று நீங்கள் கேட்கலாம். நீரில் வாழும் அணுக்களே இவைகளுக்கு ஆகாரம்.

## சில உண்மைகள்

ஆகையால் சிப்பியைத் திறந்து நீரை உட்கொண்டால் அதற்கு வேண்டுமான ஆகாரம் அகப்பட்டுக் கொண்டேயிருக்கும். இவற்றில் சில சிப்பிகளுக்கு, இனம் மாறிக்கொள்ளும் தன்மையும் உண்டு. முதலில் ஆணாகவும், முட்டையிடுங்கால் பெண்ணாகவும் முட்டைகளிட்டபின் மறுபடியும் ஆணாகவும் மாறுமாம். மேலும், இம்முட்டைகள் கோடிக்கணக்காக உண்டான போதிலும் ஜனித்த குஞ்சுகளில் பத்துப் பன்னிரண்டு தான் பிழைக்க முடிகிறதென்றால் சிப்பிகளின் வர்க்கம் ஓங்கி வளர முடியாதென்று நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

முத்துக்கள் எப்படி உண்டாவதென்று கேட்டால் அநேகர் முத்துச் சிப்பி வாயைத் திறந்துகொண்டு சமுத்திரத்தில் மிதந்துகொண்டே இருக்கும்போது மழைத் துளிகள் ஏதாவது அதற்குள் விழவே, சிப்பி மூடிக்கொண்டு, அம்மழைத்துளி முத்தாக ஆகிவிடுகிறதென்று சொல்வார்கள். இது முற்றும் உண்மை இல்லை. சிப்பி மிதப்பதுமில்லை, மழைத்துளிமுத்தாவதுமில்லை. ஆனால் முத்துச் சிப்பிகளுக்கு மணல் முதலிய ஏதாவதொரு வஸ்து தங்கள்வயிற்றில் சிக்கிக் கொண்டு வேதனை பண்ணினால் இந்தப் பிராணிகள் வேதனை செய்யும் வஸ்துவைச்சுற்றி ஒருவிதமான மெழுகு போன்ற பதார்த்தத்தைப் பூசிவிடுகின்றன. இம்மாதிரி மூடின உருண்டைகள் தான் முத்துக்கள். இப்படிப்பட்ட முத்துகள் அவ்வளவு உயர்தரமானதல்ல. நம் வயிற்றில் நாக்குப்பூச்சிகள் உபத்திரவம் பண்ணுவது போல் இந்தப்பிராணிகள்வயிற்றிலும்கூட சில புழுக்கள் உபத்திரவம் செய்கின்றன. இந்தப் பிராணிகள் தங்கள் வழக்கம் போல் இம்மாதிரி உபாதை செய்யும் புழுக்களை அடக்க அவைகளைச் சுற்றி இந்த மெழுகு போன்ற வஸ்துவை மூடிவிடுகின்றன. புழுக்களை அடக்கம் கொண்ட இந்த முத்துக்களே மிகவும் உயர்ந்தனவாம். நூற்றுக்கணக்கான ரூபாய்கள் கூடப் பெருமான முத்துக்கள் இப்படிப்பட்டனவே.

## பவளம்

கடலிலிருந்து நமக்குக் கிடைக்கும் மற்றொரு ஆபரணம் பவளம். நல் பவளங்கள் மிகவும் விலை உயர்ந்தது. பவழ மாலைகளும் பவழ மோதிரங்களும் அணியாத இந்தியர்கள் மிகவும் சிலரே. கல்லைப்போன்ற இவ்வழகிய சிகப்புப் பவழங்கள் கடலில் வாழும் பூச்சிகளாக இருந்தனவென்றால் நாம் அதை உடனே நம்பக்கூடிய விஷயமாகக் காணாது. இருந்தாலும் உண்மையில் அப்படித்தான். இம்மாதிரி அணுக்கள் பல கோடிகளாகச் சேர்ந்து ஒரே அடையாகச் சமுத்திரத்தில் வளர்ந்து வருகின்றன. மேலும் மேலும் அணுக்கள் வளர்ந்து கொண்டேவர, அடியிலிருக்கும் அணுக்கள் மடிந்து அஸ்திவாரம்போல் ஆகிக்கொண்டே வருகிறது. இப்படிப் பவழ அணுக்கள் ஒன்றின்மேல் ஒன்றாக வளர்ந்துகொண்டு வரவே கடைசியில் சமுத்திர மட்டத்திற்கு மேலும் வந்துவிடுகின்றன. சமுத்திரத்தில் சிவந்த தீவுகள் போலத் தோன்றும் இந்தப் பவழ அணுக்களின் கூட்டங்கள் மிக அழகாக இருக்கும். இவை மேலும் மேலும் கூட்டத்தின்மேல் கூட்டமாக வளர்ந்து கொண்டே வருவதால் இப் பவழத் தீவுகள் சமுத்திரத்தில் பரவிக் கொண்டே வருகின்றன. இப் பவழத் தீவுகளில் மண்ணும் மட்டைகளும் சேர்ந்து மரம் செடிகளும் முளைத்துத் தென்னஞ் சோலைகளும் உண்டாகின்றன.

## மற்றொரு வகை

நாம் பல ஆபீஸுகளிலும் வீடுகளிலும் உபயோகப்படுத்தும் கடல் பஞ்சைப் பார்த்திருக்கலாம். இதைப் பார்த்தால் செடிகளிலிருந்து உண்டாவது போல் தோன்றும். முன் காலங்களில் இது சமுத்திரத்தில் உண்டாகும் ஒரு பூண்டு என்று நினைத்திருந்தார்கள். உண்மையில் இதுவும் கடலிலிருக்கும் ஒரு ஜீவப்பிராணியே. அப்படியானால் இவைகளுக்குக் கண், மூக்கு, அல்லது ஏதாவது அவயவங்கள் உண்டா என்று நீங்கள் கேட்கலாம். அப்படிக்கு ஒன்றும் கிடையாது. அவை இங்குமங்கும் அசைவதும் கிடையாது. கடலின் தரையில் ஒட்டிக்கொண்டு இருக்கின்றன. பாறைகளோடு பாறைகளாக இருந்தாலும் அவை ஜீவிக்கும் பிராணிகளே. கடல் பஞ்சுக்குத் தனியாக வாயும் வயிரும் கிடையாது. அதிலிருக்கும் ஒவ்வொரு துவாரமும் ஒவ்வொரு வாயே. கடல் பஞ்சின் சொரூபம் அப்படியே முழுதும் அதின் உடல் என்றும் கருதலாம். துவாரங்களின் வழியே சமுத்திர நீரை உட்கொண்டு மற்ற பெரிய துவாரங்களின் வழியாக நீரை வெளியே விடும். இப்படி அதன் உடல்

(23-ம் பக்கம் பார்க்க)

## இன்னொரு பிறப்பு வாய்த்தால்...

(முன் பக்கத் தொடர்ச்சி)

திருந்த போதிலும் அதில் இடைப்பட்ட சில சில இடையூறுகளால், வேறு உத்தியோகத்தைத் தேட வேண்டியும் கூட நேர்ந்தது. அவைகளில் முதன்மை ஸ்தானமாக மைசூர் ராஜங்க போட்டி பரீக்ஷையில் தேர்ச்சியடைந்து ராஜாங்க இலாகாக்களில் புகுந்துகொள்வது நலமென்று நினைத்து அப்பரீக்ஷைக்கும் போகவே, வேளையில் கண் உபத்ரவத்தால் பரீக்ஷை முதற் தடவை தவறுண்டது. இரண்டாவது யத்தனத்துக்கு பணத்தைக் கட்டிவிட்டு பரீக்ஷைத் தருணத்தில், இரண்டு மாத காலம் பாதி சம்பளத்தில் லீவு வேண்டுமென்று கேட்டதற்கு "நீ அவ்வளவு சாவகாசம் பெற்று படித்தல் அவசியமேயில்லை" என்று, காலேஜ் தலைவர் உத்தரவு கொடுத்துவிடவே அவருக்கடுத்தவரிடம் சிபார்சுக்குப் போனேன். அவர் 'நீஏன் பரீக்ஷைக்கு போக வேண்டும். இப்பொழுது எழுபத்தெண்மர் அந்தப்படித்தர உத்தியோகத்திலிருக்கிறார்கள். எழுபத்தொன்பதாம் உத்தியோகஸ்தனாய்ச் சேருவதில் லாபமென்ன வென்றும் இருக்குமிடமிருந்து வேலைசெய்தால் மற்றவர்களுக்குக் கிடைக்காத பேர் ஸம்பாதிக்கலாமென்று கட்டின பண நஷ்டத்தைத் தான் கொடுப்பதாகவும் சொன்னார்.

அதை அங்கீகரித்தபடியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு, நஷ்டம் கட்டிக் கொடுக்க வேண்டாமென்றுஞ் சொல்லிவிட்டேன். அது முதல் வேறுவிதமான முயற்சி ஏற்பட்டது. **(அடுத்த இதழில் முடிவாகும்)**

# தராசு

## ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீநிவாஸன்

★

சத்யமூர்த்தியிடத்தில் எனக்கு அலாதிவிசுவாசம். சுமார் 25 வருஷ காலமாகத் தெரியும்; பொது வாழ்வில் புகுந்தது முதற்கொண்டு பழக்கம். ராஜீயத் துறையில அவர் செய்த சேவையை மதிப்பிடுவது எளிதல்ல. இன்று தமிழ் நாட்டிலே விழிப்புண்டா? அதைத் துலக்கியது அவர். தமிழ் நாட்டிலே வீரம் உண்டா? அதைத் தீட்டியது அவர். ஓய்வு நேர வேலையாக அவர் கொள்ளவில்லை ஒழிந்த நேர விளையாட்டாக அவர் கருத வில்லை. வாழ் நாள் பூராவையும் தத்தம் செய்தார். எல்லை காணாத வேலை; செய்பச் செய்ய சுரந்து கொண்டே சென்றது. வானவில்லைத் தொடர்வது போலாயிற்று. நெருங்க நெருங்க நகர்ந்து கொண்டே போயிற்று அது மாத்திரமா? ஊதியமில்லாத உழைப்பு. ஊருக்கெல்லாம் சேவகம். பழுது கூற பலர் உண்டு. பாராட்ட மிகச் சிலரே முன் வந்தனர். நண்பர்களே சிலர் யோசிக்காமல் பேசக் கேட்டிருக்கிறேன். அவருக்கு என்ன குறை! நல்ல யோக ஜாதகம். போகுமிடமெல்லாம் மரியாதை; கழுத்தை நீட்டின இடமெல்லாம் மாலை; வந்த வீடடிலெல்லாம் விருந்து; என்றெல்லாம் கூறினர். அல்ப புத்தியும் அறியாமையும்தான் காரணம். ஒரு வேளை விருந்து சாப்பிட்டால் எவ்வளவு நாள் தாங்கும்? வீட்டிலே அடுப்பு புகைய வேண்டுமே? யார் யம்மான் கொடுத்திருக்கின்றனர்? நாள் பூராவும் நாட்டுக்கு உழைக்கிறாரே; காலக்ஷேபத்திற்கு என்ன செய்கிறார் என்று யாராவது கவலை கொண்டார்களா? குறை கூற மாத்திரம் வந்துவிடுகிறார்கள்! உலகத்தின் இயல்பு அது: நொந்து கொள்வதில பயனில்லை.

* * * * * *



ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி.

ஏழைக் குடும்பத்தில் பிறந்து, சிரமப்பட்டுப் படித்து, பெருமையாக பரீக்ஷையில் தேறி, வக்கீல் தொழிலில் இறங்கினார். சலுகையோ செல்வாக்கோ அவருக்கு இல்லை. காலம் கூடிவரக் காத்திருந்தார். காலத்தை வீணாக்காமல் கலை வளர்ச்சியில் கவனத்தைத் திருப்பினார். சுகுண விலாச சபையார் நடித்த நாடகங்களில் சிரத்தை சென்றது. நாடக மேடையில் கூச்சம் கழிந்தது. பேசவும் பழகிக் கொண்டார். பேச்சின் வன்மையை அறிந்தார். பேசப் பிரியம் பிறந்தது. பேச சந்தர்ப்பமும் பெருகி வந்தது, வசியமாகப் பேச பக்குவப்படுத்திக் கொண்டார். கேட்போர் உள்ளம் உருக, உணர்ச்சி பெருக, பேசுவது எளிதல்ல. உள நூல் அறிவு வேண்டும். எந்த இடத்தில் எப்படிப் பேசினால் ஏறும் என்று தெரிய வேண்டும். படிப்பிருந்தால் மாத்திரம் போதாது. சத்தியமூர்த்தியைவிட ஆழமாகக் கற்றவர் உண்டு. ஆனால் படித்ததை அவரவ்வளவு ஆளக் கற்றவர் இல்லை. கூட்டத்திற்கு கூட்டம் வித்தியாசம் உண்டு. ஓரிடத்தில் பேசுவது இன்னொரு இடத்தில் எடுக்காது. வாதம் நிறைந்த பேச்சு சாதாரண ஜனங்கள் நிறைந்த கூட்டத்தில் பயன்படாது. பசப்பும் பகட்டும் அறிவாளர்கள் நிறைந்த கூட்டத்தில் பலிக்காது. சத்தியமூர்த்தி கெட்டிக்காரர். பேசு முன் கூட்டத்தின் லக்ஷணத்தை அளந்து கட்டி விடுவார்—கூட்டம் பெருகப் பெருக குசால் அவருக்கு ஜாஸ்தி. பெரும் கூட்டத்தை குஷிப்படுத்துவது எளிது. தொண்டை வலு தேவை. உச்சரிப்பு அழுத்தம் திருத்தமாயிருக்க வேண்டும். கேட்போர் மனதில் உதிக்கும கருத்தை அறிந்து அவர்கள் ரசிக்கும்படி அதை சித்தரித்து வழங்கவேண்டும். சூக்ஷ்மம் அவ்வளவுதான். அறிய அநுபவம் வேண்டும். ஆள சக்தி வேண்டும். இரண்டும் நன்றாக அமைந்திருந்தது சத்தியமூர்த்தியிடத்தில். ஆங்கிலத்தில் நன்றாகப் பேசுவார். அதைவிட நன்றாக தமிழில் பேசுவார். இரண்டிலும் தேன் போல் ஒழுகும் தேவ பாஷையிலிருந்து மேல் கோள்கள். சம்ஸ்கிருதத்தில் நல்ல பாண்டித்யம். பேச வேறு என்னவேண்டும்?

* * * *

இடைக்கால வேலை இடைவிடாத வேலையாக முடிந்தது. தொழிலுக்கு அவகாசம் காணவில்லை. ராஜீயக் கிளர்ச்சி வலுத்துவிட்டது. ஹோம் ரூல் லீக் பிரசாரவேலையில் இறங்கிற்று. சத்யமூர்த்திக்கு கிடைத்த அழைப்புக்கு அளவில்லை. பேசிப் பேசி பேச்சிலே மெய்மறந்தார். ஊராருக்கு உபதேசித்தது உள்ளத்திலே ஊன்றிக்கொண்டது. ஆழத்தை அவரே அறியவில்லை. காங்கிரஸ் சரித்திரத்தில் காந்தி படலம் ஆரம்பமாயிற்று. தியாக திட்டத்தைக்கண்டு சற்று திகைத்தார். முன்செல்ல மனம் துணியவில்லை. பின் வாங்க மனம் தாங்கவில்லை. தொழிலிலே எஞ்சியிருந்த சிரத்தையும்நீங்கி விட்டது. :சுயராஜ்யக் கக்ஷி காங்கிரஸிலிருந்து முளைத்த போது பிரசாரவேலையில் முழுமூச்சாக இறங்கினார். பிரசாரத்திற்கு அவரிடம் கண்ட பிரசக்தி யாரிடமும் காணவில்லை. பிரசார லக்ஷணத்தை நம் நாட்டில் இன்னும் பலர் அறிந்து கொள்ளவில்லை. கடுமையான கண்டனத்தைக் கண்டு கலங்குகிறார்கள். அநுபவமுள்ளோர் ஆயாசப்படத் தேவையில்லை. கண்டனத்தில் கருத்தில்லை. கக்ஷிவாதத்தில் கூட்டியும் குறைத்தும் தான் பேசுவார்கள். அதில் தவறும் இல்லை. சம்பிரதாயம் அதுதான். வக்கீல் தன் கக்ஷியின் நியாயத்தையே எடுத்துக்கூறுவார். நடுக்கண்ட நியாயத்தை வழங்குவது நீதிபதியின் வேலை. பிரசாரம் வக்கீல் வாதத்திற்கு சமானம். ஜனங்கள் ஜூரர்கள் நிலையில் இருக்கிறார்கள். இந்த ஜூரியை வசப்படுத்துவதில் சத்தியமூர்த்தி மகா சமர்த்தர். பேச ஆரம்பித்தால் நொடிப்பொழுதில் நாதம் கட்டிவிடும். வீணைத்தந்திமீது விரல் ஓடி ஒலி எழுப்புவது போலிருக்கும் அவர் பேச்சு. கண்ணன் குழலோசை கேட்டு விலங்குகளும் வீரிட்டெழுந்தனவென்று கதை சொல்வார்கள். சத்தியமூர்த்தி பேசிய கூட்டங்களில் இது கண்கூடு. உணர்ச்சியற்று உறங்கிக்கிடந்த மக்களை தட்டியெழு... தாரகமந்திரம் உபதேசித்தார். என்ன வேலை செய்தார் ... ஆயிரம் தரம் சொன்னாலும் தகும்.

* * * * *

சட்ட சபையில் நுழைந்தார்; முதலில் செ...
யில்; பிறகு இந்திய சட்டசபையில் ...
லும் நல்ல பெயர்; நடை முறை விதிக...
விஷய விவரம் அறிந்தே பேசுவார். ...
காணாது. குறும்பாய் குறுக்கிட்டால் ந...

—

வாதம் கோபுரம் போல் ஏறும். கவர்ச்சி மிருந்த காட்சி. கடைசியாக டில்லியில் ஆறுமாதம் முன் பேசக்கேட்டேன். இந்தியா சட்டசபையில் இரண்டு மணிநேரம் பேசினர். கவர்ன்மெண்டை விளாசி விட்டார். குற்றச் சாட்டுகள கடுமை. ஆனல் காது கொடுத்து கேட்பவர் இல்லை. செவிடன் காதில் ஊதிய சங்கு! பாடுகிறபாட்டை பாடிவிட்டு கதவை தாளிட்டுச்செல் என்ற கதையாயிருந்தது. சத்தியமூர்த்திக்கு அது தெரியும். சட்டசபையிலிருந்து விலகுவதில் அவருக்கு இஷ்டமில்லை. உள்ளே இருந்து கொண்டே ஆட்டி வைக்க வேண்டும் என்பது அவர் கருத்து. யோசனை ஏறவில்லை. சட்டசபையிலிருந்து கொண்டு செய்யக்கூடிய வேலைக்கு அவர் செய்து காட்டிய சேவையே போதிய சான்று. கேள்வி நேரம் சத்திய மூர்த்திக்கு சர்வமானியம். அடிக் கேள்வி ரொம்ப சாதுவாயிருக்கும். பதில் சொல்லவேண்டியது தான் தாமதம். புதைவாணம் போல் புறப்படும் உப கேள்விகள். மழுப்ப முடியாது; ஏய்க்க முடியாது; மடக்கிவிடுவார். கேள்விநேரம் சோதனை காலம் அதிகாரிகளுக்கு. சத்தியமூர்த்தியைக் கண்டால் சிம்ம ஸ்வப்னம். இவ்வளவுக்கும் அதிகாரிகளுக்கு அவரிடத்தில் அலாதி மதிப்பு. வேலை தெரிந்தவர், விஷயம் அறிந்தவர் பொருப்பை யுணர்ந்தவர் என்பது தான் காரணம். சட்டசபைக்குள் பொக்கிஷ மெம்பர் கிரெக்கும் பொதுஜன மெம்பர் சத்தியமூர்த்தியும் நரியும் நாயும் போல் சண்டைபோடுவர். சபைக்கு வெளியே இருவரிடம் காணும் அன்யோன்யம் ஆச்சர்யமாயிருக்கும். அந்தரங்கத்தை அறிந்து கொண்டால் ராஜீய வாழ்வில் கசப்பு காணுது.

* * * * * *

சட்ட சபையுடன் நிற்கவில்லை. துறை கண்டவிடமெல்லாம் சேவை செய்யப் புறப்பட்டார். நகர சபையில் நுழைந்தார். சர்வகலாசாலை வேலையில் சிரத்தை கொண்டார். மக்களின் க்ஷேம லாப விருத்தியில் கவலை காட்டிய எந்த ஸ்தாபனத்திலும் அவருக்கு பங்குண்டு. சலியாத சேவை; ஓய்வறியாத உழைப்பு. பம்பரம் போல் சுற்றிவந்தார். பத்திரிகைகளில் அவர் பெயர் காணுத நாள் கிடையாது. ஓழிந்த நேரத்திற்கு வியாஸம் எழுத உட்கார்ந்துவிடுவார். இடைவிடாத வேலைக்கு உடல் வது இடம் தரவில்லை; ஆற்றல் மிகுதியில் அலக்ஷியம் செய்துவந்தார். வியாதி ஊன்றிக்கொண்டது. பெரிய மனுஷாள் அந்தஸ்தை வியாதியில் சுலபமாகக் கண்டார். ஹிருதய நோயும் நீரிழிவும் ஆகாரத்தையும் அடக்கி தூக்கத்தையும் கெடுத்துவிட்டது. உடல் வாட உயிர் வடிய உழைத்தாரே, என்ன கைம்மாறு கண்டார்? சகஜமாக கிடைக்க வேண்டியதும் கைக்கெட்டவில்லை. காரணம் கையில் ஒட்டமில்லாததே. பிரபஞ்சம் பணத்தை ஆச்ரயித்து நிற்கிறது. பணமிருந்தால் பிரபு. பதவியும் பெருமையும் தேடிவரும். பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை. அநுபவம் இதையே அறிவுறுத்துகிறது. நிஷ்காம சேவையில் நிம்மதி பெறுவது எல்லோருக்கும் எளிதல்ல. பணமிருப்பவர் பணத்தின் குறையை அறியலாம். பணமில்லாதவர் பணத்தின் குணத்தையே அறிவர். சத்தியமூர்த்திக்கு இகப்பற்று அதிகம். சிற்றின்பத்தில் பிரியம். ஆடம்பரத்தில் ஆசை. குடியிருக்க அழகிய மாளிகை; பங்களா வாசலில் கை கட்டிய சேவகன். வெளியே செல்ல வாகனம்; விருந்து வைக்க வசதி; ஊரார் கொண்டாட அந்தஸ்து; உறவினருக்கு உதவும் வியாபகம். இவை ஒன்றும் பிரமாதமல்ல. நியாயமான எண்ணங்கள். சுலப சாத்திய மானவை. ஆனல் சத்தியமூர்த்தி சம்பந்தப்பட்டவரையில் ஒவ்வொன்றும் பெரிய கார்யமாகிவிட்டது.

* * * * *

காரணம் என்ன? ஊராருக்கு உழைத்ததுதான் காரணம். சொந்த சௌகர்யங்களுக்கு சம்பாதித்துக்கொள்ள சாவகாசமில்லை. யோக்கியதைக்கு குறைவில்லை. காலக்கிரமத்தில் நல்ல வரும்படி வந்திருக்கும். காத்திருக்கவில்லை. ஊர் வேலையை இழுத்துப் போட்டுக்கொண்டார். அது அவரை இழுத்துக்கொண்டு போய்விட்டது. வஞ்சனையில்லாமல் உழைத்தார். குறைவில்லாமல் காலக்ஷேபம் நடக்கும் என்ற நம்பிக்கை. எதிர்பார்த்த அளவு கூடிவரவில்லை. ராஜீய [illegible] அவ்வளவு அங்கம் பெறவில்லை. ஏழை நாடு; எளி[illegible] எவ்வளவு தூரம் ஈடு கொடுக்கும்! நன்றி காட்[illegible]ண்பர் சிலர் உதவினர்; என்றாலும் நிலையில்லாத [illegible] தயவு தாக்ஷிண்யத்தில் கௌரவ கால[illegible]ல்லை. அதிகமாய் எதிர்பார்த்து ஆயாசப்[illegible]கி. சேவா பக்குவம் வைராக்கிய பர் [illegible] வருடைய சேவையை கேவலம் ஒரு [illegible]க சிலர் நினைக்கிறார்கள். இதைவிட [illegible]தம் வேறில்லை. பொது நலத்தை [illegible] நலத்தைத் தேடிக் கொள்ள எவ்வ[illegible] துறுக்கிட்டன. அசைந்து கொடுத்தா

ரில்லை. உண்மையான தேசப் பற்று. உறுதியான தேசத் தொண்டு. கலங்கா நெஞ்சுடன் காங்கிரஸ் கொடி தாங்கி களங்கமற்ற சேவை செய்தார். சத்யாக்ரகம் செய்து சிறை சென்று நோய் வாய்ப்பட்டு இன்று ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். சிக்கிரம் குணமடைந்து வெளியேறி எஞ்சியிருக்கும் காரியத்தை வெற்றிகரமாய் நடத்தவேண்டும் என்பதே மக்களின் பிரார்த்தனை.

நமது தொடர்கதை

# மோகனாங்கி
## அல்லது
## திவான் திருமலைராயன் ஸாகஸம்

ஸ்ரீ. வடுவூர். கே. துரைசாமி ஐயங்கார். பி.ஏ.
எழுதியது

### முன் கதைச் சுருக்கம்

**சோழ வேந்தர்களுக்குத் திவானாக** விருந்தவர்களுடைய பரம்பரையில் கடைசி வார்சுதாரான கலியாணராமன் தஞ்சையில் நாயக் பதவியிலிருந்த ரங்கராயர் பகதூர், தன்னுடைய தந்தையைத் தூக்கிவிட்டதால், அவன் விஷயத்தில் பழி தீர்க்கவேண்டுமென்பதாக தன் தாயின் உபதேசத்தின் பேரில் சபதம் செய்து கொண்டிருக்கிறான். அவன் ஒரு நாட் காலை வஸந்த மாளிகையில் தென்பட்ட மோகனாங்கியைக் காதலிக்கிறான். அவளைத் தான் விவாகஞ் செய்து கொள்ளுவதாக ஏற்பாடு செய்கிறான். மறுநாள் அவன் வாராதது மோகனாங்கிக்கு வருத்தம் தருகிறது. பின்பு கோட்டை அறையில் அடைப்பட்ட கலியாணராமன் தப்புகிறான். பின்பு நரசிங்கன் தன் தமயனைத்தான் தப்புவித்த விதத்தை அவனிடம் கூறுகிறான். அமுல்தாருக்குக் கைதி தப்பிய விஷயம் தெரிந்து அவர் சிப்பாய்களைத் தேடிப்பிடிக்க அனுப்புகிறார். பீமசேன ராவ் முதலியவர்கள் கைப்பற்றப்பட்ட பட்டையங்களைப் பார்த்து வரும்போது மோகனாங்கிக்கு தஞ்சை நாயக் மன்னரால் 1000 வேலி நிலம் இனாம் கொடுக்கப்பட்டிருப்பது தெரியவருகிறது. அனுமந்தன் நேராக தஞ்சை திவானிடம் போய் மோகனாங்கியை வெளியேற்ற சூழ்ச்சி பண்ணுகிறான். அனுமந்தன் திவான் உத்தரவுடன் சென்று மோகனாங்கியை அழைத்துக் கொண்டு போகிறான். அங்கு அவள் தாதிகளுடன் இருக்கிறாள். மோகனாங்கியின் பூர்வோத்திரத்தை யறிய திவானுக்கு அதிக ஆவல் உண்டாகிறது. இது நிற்க கலியாணராமன் ஊருக்குப் புறப்படுகிறான். திவானும் ரகஸ்யமாகப் புறப்படுகிறார். கலியாணராமன் பிரயாண நோக்கத்தை உளவறிய அனுமந்தன் கிழ வேஷத்தில் கூடவே பிரயாணம் செய்து அவர்களது இரு கடிதப் பிரதிகளைக் கைப்பற்றுகிறான். மார்க்கத்தில் கல்யாணராமனும் மோகனாங்கியும் சந்திக்க சந்தர்ப்பம் கிட்டுகிறது. பின்பு மோகனாங்கி திடீரெனப் புறப்பட நேரிடுகிறது. மாறு வேஷத்தில் அனுமந்தன் வந்து கல்யாணராமனை ஏமாற்றப் பார்க்கிறான். மோகனாங்கி அவள் தகப்பனாரைச் சந்திக்கும் சந்தர்ப்பம் சம்பவிக்கிறது. பின்பு மோகனாங்கி சம்பந்தமாக அவள் பிதா தஞ்சை அரசருக்கும் திவானுக்கும் சம்பாஷணை நடக்கிறது. பின்பு ஒரு தாதியின் உதவியால் மோகனாங்கி தப்புகிறாள்: திவானுக்கு யோசனை ஆரம்பித்து விட்டது.

## அத்தியாயம் 30.

### பிறவிக் குருடன் பெற்ற கண்கள்

அரண்மனையில் வேலை செய்த தாதிகள் தங்கள் கடமைகளைச் செய்து விட்டு, புருஷரிடத்திற்கோ, ஆசை நாயகர்களிடத்திற்கோ இரவில் போவது வழக்கமாதலால், அங்கங்கு காவல் காத்து நின்ற பாராக்காரர்கள், ஸ்திரீகள் இரவில் போய் வருவதைப் பற்றி ஆட்சேபிப்பதுமில்லை, அவர்களைத் தடுப்பதுமில்லை. ஆகவே, மோகனாங்கியும், தாதியும் அரண்மனையை விட்டு வெளியில் சென்ற பொழுது, பாராக்காரர்கள் எவ்வித சந்தேகமும் கொள்ளாமல் அவர்களை வெளியில் விட்டு விட்டனர்.

அந்த இரவு கழிய, பொழுது விடிந்தது. மோகனாங்கியின் தாதிகள் அவளுடைய விடுதிக்குள் வந்து பார்த்த காலத்தில், மோகனாங்கி காணப்படவில்லை. அவளை வெளியில் அழைத்துக் கொண்டு போன தாதி எதையும் அறியாதவள்போல், மற்றவர்களைவிட அதிக வியப்படைந்து பரிதவிக்கத் தொடங்கினாள். இரவில் அங்கே திவான் வந்து, மோகனாங்கியுடன் இருந்து பொழுதைப் போக்கிவிட்டு அவளை வேறு எங்கேயாகிலும் அழைத்துக் கொண்டு போயிருப்பாரோ என்னும் சந்தேகத்தை ஷெ வஞ்சகத் தாதியே கிளப்பி விட்டாள். அந்த விபரீதச் செய்தி ஒரே நிமிஷத்தில் நெடுகப் பரவி, அரசருக்கும் திவானுக்கும் எட்டியது. அரசர் அபாரமான வியப்போடு திவானுடைய முகத்தைப் பார்க்க, திவான், ''இது பெரிய மோசடியாய் இருக்கிறது. நான் அவளிடம் போகவுமில்லை. அங்கே வருவதாகச் செய்தி சொல்லியனுப்பவுமில்லை. அவள் தந்திரம் செய்து தாதிகளை அனுப்பிவிட்டு எங்கேயோ போயிருக்க வேண்டும்'' என்றார்.

அதைக் கேட்ட அரசர் மிகுந்த படபடப்பும் கலக்கமும் அடைந்து, ஆள்களைவிட்டு அரண்மனையிலும் சுற்றுவட்டாரத்திலும் ஓர் இடம் விடாமல் தேடி அவளைக் கண்டு பிடிக்கும்படி உத்தரவு பிறப்பித்தார்.

ஆனால் அவளைக் கண்டு பிடிப்பதற்கு ஒரு பெரிய இடையூறு ஏற்பட்டது. மோகனாங்கியை அவளுடனிருந்த நான்கு தாதிகளும், திவானும், அரசருமே நேரில் பார்த்தவர்கள். அவர்களைத் தவிர வேறு எவரும் பார்த்தவர்களன்றாதலால், அவளைக் கண்டு பிடிப்பது முடியாத காரியமாகி விட்டது. அவ்வளவு பெரிய பட்டணத்திலும் விசாலமான அரண்மனையிலும், நூற்றுக்கணக்கில் ஆண்கள் தேடினராலும் மோகனாங்கியின் அடையாளம் அவர்களுக்குத் தெரியாத நிலைமையில், அவர்களுடைய பாடு வீண் பாடாக முடிந்தது.

அரசரும் திவானும் நெருப்புத் தணலின் மேல் இருந்தவர் போல் வேதனைப்பட்டுத் தத்தளித்தபடி மேன் மேலும் ஆள்களை முடுக்கிக்கொண்டிருந்தனர்.

இவர்களை நாம் சற்று விடுத்து சத்திரத்தில் இருந்த கலியாணராமனைக் கவனிப்போம்.

போலி புஜங்கராவிடத்திலிருந்து புறப்பட்டுத் தன் ஜாகையை அடைந்த கலியாணராமனுடைய மனது, ஒரே குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. அரசரை அவன் கொல்ல முயற்சிக்கையில் அவனுக்கு அபாயம் நேர்ந்து விடுவது நிச்சயமென்று, புஜங்கராவ் தீர்க்க தரிசனம் போல் கூறியது, அவனுடைய மனதில் நன்றாக உறைத்ததாகையால் அத்தனை மெய்காப்பாளருடன் இருக்கும் அரசரைத் தான் வெட்டுவது அநேகமாய்ப் பலியாத காரியமென்றும், அந்த முயற்சியில் தான் பிடிபட்டு தன் உயிரை இழப்பது நிச்சயமென்றும அவன் நன்றாக உணரத் தொடங்கினான். தன்னைப் பற்றி அரசரிடம் புஜங்கராவ் சிபார்சு செய்து ஏராளமான சொத்துகள் திவான் பதவி



கல்யாணராமனும் மோகனாங்கியும் வண்டியில் ஏற வந்தனர்.

ஆகியவற்றைவாங்கிக்கொடுப்பதாகச் சொன்னது சிறிதளவு அவனுடைய மனத்திற்கு இன்பமளித்ததானாலும், தன் தந்தையின் சபதத்தையும், தன் தாயின் பிரமாணிக்கத்தையும் தான் நிறைவேற்றாமல் அரசர் கொடுக்கும் சன்மானங்களுடன் போனால், தான் தனது தாயை இழந்து விடுவது நிச்சயமென்று தோன்றியதன்றி, தன் தந்தையின் ஆத்மாவினால் தன் ஆயுட்காலம் முழுதும் தனக்கு ஏதேனும் பயங்கரமான கொடிய துன்பம் நேருமென்றும் அவன் அஞ்சினான். இவைகள் அன்றி அவனுடைய மனம் மோகனாங்கியைப்பற்றி பெரிதும் கலக்கமும், திகிலும் கொண்டு தவித்தது. தான் தன் தந்தையின் சபதத்தை நிறைவேற்றும் முயற்சியில், தன் உயிருக்கு அபாயம் நேரிடுமானால், தனக்கு மனைவியாய் நிச்சயிக்கப் பட்டிருந்தவளும் தன் உயிருக்குயிராய் இருந்தவளுமான அந்த விலைமதிப்பற்ற பொக்கிஷத்திற்கும் அபாயம் நேருவது திண்ணமென்றும், அவளும் உயிரை விடுவது நிச்சயமென்றும் இருவருடைய ஸ்திரிபுருஷ வாழ்க்கை நீர்மேல் குமிழி போல் கிஞ்சித் போகமாய் அழிந்து போகுமே என்றும் நினைத்து துக்க சாகரத்தில் ஆழ்ந்து கண்ணீர் விடுத்து உருகியபடி கலியாணராமன் அன்றிரவு சாப்பிடாமல் படுக்கைக்குச் சென்றான்.

சென்றவன் படுக்கையில் கிடக்கை கொள்ளாமல் தத்தளித்திருக்க மணி சுமார் பத்தரை ஆயிற்று.

நரசிங்கன் கதவண்டை நின்று, "தம்பீ தம்பீ" என்று மெல்லக் கூப்பிட்ட ஓசை உண்டாயிற்று. கலியாணராமன் திடுக்கிட்டு, "ஏன் அண்ணா!" என்று கேட்டுக்கொண்டு குபீரென்று எழுந்து வெளியில் வர, வாசற்படியில் போர்வை மூட்டத்தில் நின்ற மோகனாங்கி தன் போர்வையை விலக்கி விட்டு சந்தோஷ முக மலர்ச்சியோடும் மட்டிலடங்காத ஆவலோடும் தன் கைகளை நீட்ட, அவன், "ஆ! மோகனா, நிஜந்தானா அல்லது கனவா!" என்று அபாரமான வியப்போடு கேட்டபடி பாய்ந்து அந்தக் கட்டழகியைக் கட்டி இறுகத்தழுவி அணைக்க, அவள், "நான் சிறையிலிருந்து தப்பி வந்து விட்டேன். யாராவது என்னைத் தேடிக்கொண்டு வந்தால், "இங்கே யாரும் வரவில்லை" என்று சொல்லும்படி தங்கள் தமயனாரிடம் சொல்லி வையுங்கள்" என்றாள்.

உடனே கலியாணராமன் அவளைவிட்டு மிக அவசரமாக வெளியில் வந்து நரசிங்கனிடம் அந்தச் செய்தியைத் தெரிவித்து விட்டு, தான் இருந்த அறையின் கதவை மூடி உட்புறத்தில் தாளிட்டுக்கொண்டு மோகனாங்கியிடம் வந்து, பக்கத்தில் இருந்த ஒரு திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, அவளையும் தன் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு, மிகுந்த கவலையும் அச்சமும் கொண்டவனாய், "மோகனா, உன்னைச் சிறையிலா வைத்தார்கள்! அப்படிச் செய்தது யார்? உன் தகப்பனார் உன்னை வரவழைத்ததாக நீ சொன்னாயே!" என்றான்.

மோகனாங்கி:— (அப்போதும் தன் படபடப்பையும் திகிலையும் விலக்கமாட்டாமல்) என் தகப்பனார் அழைத்தார் என்பது வெறும் கட்டுக்கதை. எல்லாம் இந்த சமஸ்தானத்து திவானுடைய கை வரிசை. அவருக்கு என்மேல் உண்டான துராசையினால், என்னை வசந்த மாளிகையிலிருந்து பலவந்தமாய் வரவழைத்தார்; பிறகு என் தகப்பனார் பார்க்க ஆசைப்படுவதாய் மகாராஜா எழுதியது போல, ஒரு கடிதம் தயாரித்து எனக்குப் படித்துக் காட்டி என்னை இங்கே அனுப்புவதுபோல் பாசாங்கு செய்து, அவர் மாறு வேஷத்தில் என்னோடு கூடவே பின்னால் தொடர்ந்து வந்து, பெட்டி வண்டியில் மறைந்திருந்து என்தகப்பனார் போல் நடித்து, என் தாயைப்பற்றி ஒரு கட்டுக்கதையைச் சொல்லி முடிவில் என்னை இந்த ஊரில் கொண்டுவந்து வைத்தார்— என்று கூறி, தகப்பனார் தெரிவித்த பழைய வரலாற்றையும் மிலேச்சன் விஷயத்தையும், அதனால் தன் தாய் நிரபராதி என்று அவர் உணர்ந்து வருந்தியதையும், இந்த ஊருக்கு வந்து தங்கிய பிறகு அன்றிரவு தாதி தெரிவித்த திவானுடைய கபட ஏற்பாட்டையும் சவிஸ்தாரமாய் அவனிடம் கூறினாள்.

அவைகளையெல்லாம் கேட்ட கலியாணராமன் மிகுந்த ஆச்சரியம் அடைந்து, "ஆஹா! அப்படியா செய்தி! நல்ல வேளையாக நீ அந்த துஷ்டனுடைய வலையிலிருந்து தப்பி வந்தாய்! இனி என்னை விட்டு நீ பிரியவேண்டாம். இதனால் என் உயிருக்கு அபாயம் வந்தால்கூட நான் அஞ்சப்போகிறதில்லை; உன்னை இனி அவன் அபகரித்துக்கொண்டு போகவும் நான் விடப்போகிறதில்லை. என் உயிர் பிரிந்தால்தான் நீ என்னை விட்டுப் பிரிவாய்" என்றான்.

மோகனாங்கி:— தங்களுடைய உயிர் போனால் அதற்குப்பிறகு என் உயிர் நிற்குமென்று நினைக்கிறீர்களா! அதே நிமிஷத்தில் நானும் உயிரை விடுவது நிச்சயம்.—என்றாள்.

அவளுடைய அன்புததும்பிய உறுதிச் சொற்களைக் கேட்ட கலியாணராமனுடைய மனம் பொங்கியது. கண்கள் கலங்கிக் கண்ணீர் சொரிந்தன. அவன் கரைபுரண்டோடிய வாத்சல்யத்தோடு அந்த ஜோதி வடிவத்தைக் கட்டியணைத்து, "ஆஹா! என் பாக்கியமே பாக்யம்! விலையில்லா நிதியான உன்னையடைய நான் முன் ஜன்மங்களில் என்ன தவம் செய்தேனோ! ஆஹா! அன்றைய தினம் உன் தந்தை உன்னை அழைத்துக்கொண்டு போனதாய்க் கேள்விப்பட்டதுமுதல் இனி உன்னைக் காணப்போகிறேனா என்று நினைத்து ஏங்கிப் போயிருந்தேன். நல்ல வேளையாக நீ அனுப்பிய ஒரு சிப்பாயி எனக்கு தைரியமும் நம்பிக்கையும் உண்டாக்கினான். நீ இருக்கும் இடத்தைத் தெரிந்துகொண்டு வரும்படி அவனை அனுப்பினேனே! அவன் உன்னிடம் வரவில்லையா?" என்றான்.

மோகனாங்கி:— (திடுக்கிட்டு வியப்போடு) யார்! சிப்பாயியா! நான் யாரையும் அனுப்பவில்லையே! இது பெரிய மோசடியாயிருக்கிறதே!

கலியாணராமன்:— (வியப்போடு) ஓகோகோ! அப்படியானால், அவன் திவானால் அனுப்பப்பட்ட உளவனாய்த்தானிருக்கவேண்டும்.

மோகனாங்கி:— அப்படித்தான் இருக்கும்! அந்த திவான் பெரிய மாயாவியாயிருக்கிறான்! இப்போதும் என் அபாயம் நீங்கிவிட்டதாக நாம் நினைப்பதற்கில்லை. என்னைத்தேட அவன் ஆள்களை எல்லா இடத்திற்கும் அனுப்புவான்; இங்கே அவனே வந்தாலும் வருவான். ஆகையால் நாம் முன்னெச்சரிக்கையாக நடந்துகொள்ள வேண்டும். இந்த ஊரைவிட்டே நாம் எங்கேயாவது போய்விட்டால்தான் நமக்கு அபாயம் இல்லை.

கலியாணராமன்:— நீ எதற்கும் கவலைப்படாதே! உனக்கு எவ்வித அபாயமும் உண்டாகாமல் பார்த்துக்கொள்வது இனி என்னைச் சேர்ந்த பொறுப்பு. நான் இந்த ஊருக்கு எந்தக் காரியத்தை உத்தேசித்து வந்தேனோ, அது முடியும் சமயத்திற்கு வந்திருக்கிறது. எப்படியும் இன்னும் சில தினங்களில் அது முடிந்துவிடும். உடனே நாம் புறப்பட்டு ஊருக்குப் போய்விடலாம். அதுவரையில் உன்னை நான் பந்தோபஸ்தான ஓர் இடத்தில் கொண்டுபோய் விட்டுவைக்கிறேன். அவர்கள் மிக ஜாக்கிரதையாய் உன்னைப் பார்த்துக்கொள்வார்கள்.

மோகனாங்கி:— அவர்கள் யார்?

கலியாணராமன்:— உன்னை வளர்த்தவராகிய பீமசேன ராவுடைய சின்ன அக்காள் புருஷர். அவருடைய பெயர் புஜங்கராவ். அவருக்கு பீமசேனராவ் ஒரு கடிதம் கொடுத்தார். நேற்று நான் போய் அவரைப் பார்த்தேன். மறுபடி நாளைய தினம் காலையில் அவர் எனக்கு வண்டி அனுப்புவார். வண்டியில் நான் உன்னையும் அழைத்துக்

(21-ம் பக்கம் பார்க்க)



# காதலின் மோதல்

மஹாமஹோபாத்தியாய
★ ஆர். வி. கிருஷ்ணமாச்சாரியார் ★

நாடகம் எழுதுவதில் மஹாகவி காளிதாசனுக்கு அடுத்தபடி மதிக்கப்படும் மகாகவி பவபூதி. இவர் எழுதிய மூன்று நாடகங்களுள் 'மாலதி - மாதவம்' இரண்டாவது. இவர் மஹா வைதீக யாக்ஞ வம்சத்தில் கி. பி. ஏழாம் நூற்றுண்டின் இறுதியில் பிறந்தவர். இவர் சகல கலா வல்லவர். வைதிக தர்மத்தை வழுவாது நடத்துபவர். நாடகங்களில் பிரதானமாகக் காணப்பட்ட சிருங்காரம், வீரம் ஆகியவற்றுள் சிருங்காரத்தை காளிதாஸர் கைக்கொண்டு விட்டபடியால் இவர் வீர ரசத்தை எடுத்துக்கோண்டு "மஹா வீர சரிதம்" எழுதினுர். இதில் அப்போது இவர் அதிகம் புகழ் பெறவில்லை. மறுபடியும் ஆலோசித்து சிருங்காரத்தையே பிரதானமாக வைத்து நாடகம் எழுதக் கருதினுர். ஒரு நாடகமோ செய்தாகிவிட்டது. சாகுந்தல ஸ்தானத்தில் தாப இயற்றப்போகும் "உத்தர ராம சரித"த்தை வைப்பதாக எண்ணங்கோண்டார். காளிதாசருடைய மற்ற இரு நாடகங்களில் கூறப்படும் 10 அங்கங்களை வைத்து கல்பிதக் கதையுள்ள "மாலதி - மாதவம்" என்ற இந்நாடகத்தைச் செய்து முடித்தார். ஆகையால்தான் இதில் இரு நாயகர்களும் இரு நாயகிகளும் அமைக்கப்பெற்றுர்கள்.

★

## மாலதி மாதவம்

விதர்ப்ப தேச மந்திரியான வஸுராதனும் பத்மாவதி நகர மந்திரியான பூரிவஸுவும் பௌத்த துறவி காமந்தகியும் ஸஹபாடிகள். இரு மந்திரிகளும் தங்களது மக்களுக்கு விவாக சம்பந்தம் செய்துகொள்வதாக கல்வி பயிலும் காலத்திலேயே ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தனர். இருவருக்கும் மக்கள் பிறந்து அவர்கள் யௌவன தசையை அடைந்தனர். பழைய ஒப்பந்தத்தை ஞாபகப்படுத்தும் ரீதியில் பூரிவஸு தன் பிள்ளை மாதவனை தர்க்க சாஸ்திரம் படிக்க பத்மாவதிக்கு அனுப்பியிருக்கிறுன். பூரிவஸுவின் பெண் மாலதியைத் தன் நண்பன் நந்தனனுக்குக் கொடுக்கும்படி பத்மாவதி நகர அதிபதி மந்திரியை நிர்ப்பந்திக்கிறுன் இது பூரிவஸுவுக்கு இஷ்டமில்லை. நந்தனனுக்குக் கொடுப்பவன் போல பாவிக்கிறுன். ரஹசியமாக எப்படியாவது மாலதிக்கும் மாதவனுக்கும் விவாகம் முடித்துவிடும்படி தன் தோழி காமந்திகியை பூரிவஸு வேண்டிக்கொள்கிறுன்.

இவள் ஸன்யாஸினியாயிருந்தும் பூர்வ பரிசயத்தால் தாக்ஷிண்யத்துக்கு ஈடுபட்டு, இந்தக் காரியத்தை ஏற்றுக்கொண்டு தன் சிஷ்யை தோழி முதலியவர்கள் மூலம் இவ்விரு வாலிபர்களுக்கும் காதல் உண்டாக்கவும் அதனை வளர்க்கவும் பாடுபடுகிறுள். அவ்வாறே பரஸ்பரம் அநுராகம் உறுதிப்பட்டு விட்டது. ஒரு நாள் காமந்தகியின் சூழ்ச்சியால் மாதவன், அவனுடைய தோழன் மகரந்தன், மாலதி, அவள் தோழி மதயந்திகை, காமந்தகி, இவளுடைய சிஷ்யை, இவர்களெல்லாரும் ஓரிடத்தில் ஒன்று சேரும்படி நேரிடுகிறது. அப்பொழுது நந்தனனுடைய பேச்சு வருகிறது. மந்தரியினிடம் விசுவாஸம் கொண்ட அரசனே மாலதியை நந்தனனுக்குக் கொடுத்து விட்டதாக ஒரு பிரஸ்தாபம் வரவே! மிகவும் மனம் சோர்ந்து மஹா துக்கத்துடன் மாலதியும் மாதவனும் அவ்விடமிருந்து பிரிகின்றனர். இனிஎப்படியாவது மாலதியை அடைய வேண்டுமென்று பெருமுறுதி கொண்ட மாதவன், இதற்காக பரமஸாஹஸமான மஹா மாம்ஸ விக்ரயம் செய்ய மயானம் வருகிறுன். ஒரு உபாயத்தாலும் ஒரு காரியம் நிறைவேருவிடின், தன் சரீரத்திலிருந்து மாம்ஸத்தைப் பிய்த்தெடுத்து சுடலையிலுள்ள தேவதைகளுக்குக் கொடுத்து வழிபாடு செய்தால். அந்த தேவதைகளுடைய அநுக்கிரஹத்தால் அக்காரியம் நிறைவேறும் என்ற நம்பிக்கையும், அநுஷ்டானமும் புராதன காலத்திலேயே நம் இந்தியாவில் நடைபெற்று வந்தன. இதற்கு மேல் நடக்கும் ஒரு ஸம்பவத்தை ஐந்தாமங்கத்திலிருந்து பொழி பெயக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கட்டத்தில் பிரதானரஸம் பீபத்ஸம் என்றுலும் சிருங்காரமும் தலை தூக்கியே நிற்பதையும், சாந்த ரஸம் தவிர மற்ற எல்லா ரஸங்களுமே ஆங்காங்கு ஒரு மாதிரி அழகாக நிழலித்திருப்பதையும் காணலாம்!

### ஐந்தாம் அங்கம்

(பயங்கரமாயும், பிரகாசமாயு முள்ள வேஷத்துடன் கபாலகுண்டலை ஆகாச வழியாக வருகிறுள்.)

கபாலகுண்டலை:—பதினாறு நாடிகள் அமைந்த அநாஹதச் சக்கிரத்தின் மத்தியிலிருந்துகொண்டு யோகமார்க்கம் அறிந்தவர்கள் தியானிக்கும் பொழுது அவர்களுடைய மனத்தில் தமது ரூபத்தைக் காட்டியும், மனதை ஒருமுகப்படுத்தி ஸாதனை செய்பவர்களால் தேடப்பட்டும், சக்திகள் சூழ்ந்துமுள்ள சக்திநாதன் எல்லாரையும்விட மேலாக விளங்குகிறுர். நான் யோக காலத்தில் எனது ஹிருதயபத்மத்தில் சிவரூபத்தைக் கண்டபிறகு யோக முறைப்படி சரீரத்திலுள்ள பஞ்ச மஹாபூதங்களை இழுத்து வசப்படுத்தியதால் ஆகாச வீதியில் கிளம்பிச் செல்வதில் சிறிதும் சிரமமில்லாதவளாய் இங்கு வந்து சேர்ந்தேன். நான் ஆகாசத்தில் வெகு வேகமாக வருகிறபடியால், நான் அணிந்துகொண்டிருக்கும் கபால (மண்டை ஓடு) மாலையில் கோத்திருக்கும் கபாலங்கள் ஒன்றோடொன்று முட்ட, அவற்றின் நுனியில் கட்டியிருக்கும் சிறிய சதங்கைகள் ஒலிக்கின்றன. இது அச்சமுறுத்தும் அழகிய ஒரு காக்ஷியாயிருக்கின்றது. (சுற்றி நடந்து பார்த்து) மிகப் பழய வேப்பெண்ணெயில் உள்ளிப்பூண்டை வறுத்தால் உண்டாகும் துர்நாற்றம் போலத் துர்நாற்றமுடையதாய்ச் சிதையிலிருந்து கிளம்பும் புகை சூழ்ந்த சுடுகாட்டின் அதி ஸமீபத்தில் காளியம்மன் கோவில் காணப்படுகிறது. இந்த இடத்தில்தான் என் குருநாதா் அகோர கண்டர் மந்திரஸாதனையை முடித்துவிட்டு, இன்று விசேஷமாகப் பூஜை செய்ய வேணுமென்றும், அதற்கு வேண்டிய ஸாமக்ரியைகளை இங்குக் கொண்டு வந்து வைக்க வேண்டுமென்றும் எனக்கு கட்டளை யிட்டிருக்கிறுர். மேலும், குருநாதன் சொல்லியதாவது— "வத்ஸே! கபாலகுண்டலே! என் மந்திரஸாதனை நிறைவேறியவுடன் உயர்ந்த ஒரு பெண்மணியைப் பலி கொடுப்பதாக முன்னமேயே பகவதி காளியிடம் ஒரு வேண்டுதலைச் செய்திருக்கிறேன். அத்தகைய ஸ்திரீ ரத்தினம் இந்நகரத்திலிருப்பது யாரும் அறிந்துள்ளதுதானே" என்பதேயாம். (ஆவலுடன் கண்ணுற்று) இவன் யார்? இவனுடைய ஆகிருதி, மதுரமாயும் கம்பீரமாயும் இருக்கின்றது. இவன், குடுமியை உயரத் தூக்கி முடிந்து கொண்டிருக்கிறுன். கையிலோ கத்தி துலங்குகிறது. இச் சுடலையை நோக்கி வருகின்றுன். புழுதி படிந்தாற்போல மங்கிய இவனது சரீரம், கரு நெய்தல் பூவின் இதழ்போல மென்மையும் கருமையும் பெற்றுத் திகழ்கின்றது. முகம் முழுமதியே, இவனுடைய காலடி வைப்பு, காம்பீர்யத்தையும் அச்சமின்மையையும் அறிவிக்கின்றது. இவனுடைய இடது கையிலிருக்கும் ரத்தமொழுகும் மனித மாம்ஸத்தைப் பார்த்தால், இவன் அடக்கத்தை விட்டு ஏதோ ஒரு ஸாஹஸ காரியம் செய்யத் துணிந்திருப்பதாகத் தோன்றுகிறது. (நன்றாகக் கவனித்துப் பார்த்து) ஓ! இவன் காமந்தகியின் நண்பனுடைய பிள்ளை மாதவன்; இவன் மஹா மாம்ஸ விக்ரயம் செய்ய வந்திருப்பதாக நினைக்கிறேன். இதைப்பற்றி எனக்கு என் கவலை? என் குருநாதர் இட்ட கட்டளையை நிறைவேற்றச் செல்லுகின்றேன். ஸாயங்கால ஸந்தியா ஸமயம் பெரும்பாலும் கழிந்துவிட்டது. பூமிக்கு மேல் முடி போட்டாற்போலக் கவிந்து நிற்கும் ஆகாயத்தின் ஓரங்களில் இருள் அடர்ந்திருக்கின்றது. பூமி, ஓரம் ஓரமாகப் புது நீரில் முழுகுவதாகத் தோன்றுகிறது. சுடுகாட்டுப் புகையைக் காற்று

அடித்து எங்கும் பரப்புவதால், ராத்திரி, ஆரம்பகாலத்திலேயே, வலிதான நீலநிறம் பெறுகிறது. (சென்றுள்).

## இரண்டாம் காக்ஷி

**(கீழில் குறிப்பிட்டவண்ணம் மாதவன் வருகிறான்.)**

**மா**தவன்:— (ஆசையுடன்) மாலதியினுடைய அன்பு அரும்பி ஆர்வம் பூத்து காதல் கனிந்து இயற்கையினிமை பெற்ற (கடைக்கண் பார்வை முதலிய) அவ்வோ சிருங்கார விலாஸச் செய்கைகள் என்னைக் குறிக்கொள்ளுமா? இவ்வாறு நடைபெறுவதாக நான் கற்பனைக் கண்ணால் காணும்பொழுதே, எனது அந்தக்கரணம், மற்றப் புலன்களின் வேலையைக் குலைத்துத் தான் மாத்திரம் ஆநந்தாலயத்தை அடைகின்றது. நான் மாலதியின் மதிவதனத்தைக் கண் குளிரக் காணுகையில், ஸகல ஸுகங்களும் ஒன்று கூடி என் மனத்தில் வந்து சேர்ந்து வலிமை பெறுகின்றன. அங்ஙனமுள்ள அவளுடைய மதிமுகத்தை மறுபடியும் ஒரு முறை நான் காண்பேனா? மாலதி விஷயமாக என்னுள்ளத்தில் உறைந்து கிடக்கும் வாஸனை, (பாவனா ஸமஸ்காரம்) இப்பொழுது மேலே கிளம்பி நிற்பது கொண்டு என் நினைவு, மாலதியைத் தவிர வேறொன்றையும் பற்றாமல், அவளொருவளையே குறிக்கொண்டு வளர்ந்து தொடர்ந்து வருவதால், எனது ஆத்ம சைதன்யமே மாலதி மயமாக மாறிவிட்டது. என் மனத்துள மாலதி நன்கு பதிந்திருப்பதை ஊன்றிக் கவனிக்கையில், பதிந்த பிரகாரங்கள், பலவகையில் தோன்றுகின்றன. தண்ணீரில் உப்பு கரைவதைப் போல மாலதி என் மனத்தில் கரைந்து ஒன்றாகி லயித்துவிட்டாளோ? அல்லது என் உள்ளக் கண்ணாடியில் பிரதிபிம்பித்து நிற்கின்றாளோ? அல்லது எனது மனச் சுவரில் சித்திரமாக வரையப்பட்டிருக்கின்றாளோ? அல்லது சிலையைச் செதுக்கி உருவம் அமைப்பதை ஒப்ப என் மனத்தைச் செதுக்கி மாலதியினுருவம் அமைக்கப் பட்டிருக்கிறதோ? அல்லது தங்கத்தில் ரத்தினம் பதிய வைப்பதைப்போல என் மனத்தில்மாலதிபதிய வைக்கப் பெற்றிருக்கின்றாளோ? ஒன்றோடொன்று பிரிந்து விடாதிருக்க வஜ்ஜிரப் பசையைத் தடவி இரு வஸ்துக்களை ஒட்டி விடுமாற்போல என் நெஞ்சையும் மாலதியையும் வஜ்ஜிரப் பசை தடவி ஒன்றாகச் சேருமாறு ஒட்டிவிட்டிருக்கிறதோ? அல்லது உள்ளத்தை துளைத்து அதனுள் மாலதி புதைக்கப் பட்டிருக்கின்றாளோ? அல்லது, இரண்டு பதார்த்தங்களின்மீது தங்கக் கிலாணி அடித்து ஒன்றை ஒன்று விடாதவண்ணம் நெருக்கி உறுதிபடுத்துவதைப் போல, என் ஹிருதயத்தையும் மாலதியையும் சேர்த்து, மன்மதன் தனது ஐந்து பாணங்களென்னும் ஐந்து ஆணிகளை அடித்து ஒன்றை ஒன்று பிரியாமலிருக்குமாறு கெட்டிப்படுத்தியிருக்கின்றானோ? அல்லது என் மனத்தில் தியானமென்னும் கயிற்றினால் மாலதி நன்றாகக் கட்டப்பட்டுக் கிடக்கின்றாளோ? (திரைக்குள் கலகலத்தொனியைக் கேட்டு) ஆ! ஹா!! இங்குமங்கும் ராக்ஷஸர்கள் ஸஞ்சரிப்பதால் இச்சுடலைப் பிரதேசம் மிகவும் பயங்கரமாயிருக்கிறது. சிதைகளைச் சுற்றி எங்கும் பெருத்த கூரிருட்டு குடிகொண்டிருப்பதால் சிதை நெருப்பு செவ்வனே பிரகாசித்து எரிகிறது. கடபூதனை முதலிய பொல்லாப் பிசாசுகள், தாறுமாறாக விளையாடிக்கொண்டு ஸந்தோஷத்தால் "கில கிலா" என்று கோலாஹலம் செய்து இந்தச் ஸ்மசான ஸ்தலத்தையே சப்தமயமாக்குகின்றன. ஆகையால் நான் உரக்கக் கூச்சலிட்டுக் கூறுகிறேன்—ஏ சுடலை வாஸிகளான பிசாசங்களே! கத்திபட்டு சுத்தி பெறுவதும் குற்றமற்றதும் புருஷ சரீரத்திலிருந்து எடுக்கப்பட்டதுமான மஹாமாம்ஸம் விற்கப்படுகிறது. வாங்கிக் கொள்ளுங்கள். வாங்கிக் கொள்ளுங்கள். என் எண்ணத்தை நிறைவேறச் செய்வதுதான் இதற்கு விலை. (திரைக்குள் மறுபடியும் கோலாஹலம்) என்னே! ஆச்சரியம்!! நான் இவ்வாறு தெரிவித்தவுடனேயே பயங்கரங்களான பிசாசங்கள் பெரிய ஆரவாரம் செய்துகொண்டு நெருக்கத்துடன் கூட்டம் கூட்டமாகப் புறப்பட்டுவிட்டனவே! இப்பொழுது இந்தச் சுடுகாடே அசைவது போலத் தோன்றுகின்றது. சிறிது தெரிந்தும் சிறிது தெரியாமலுமிருக்கும் உலர்ந்து நீண்ட சரீரமுள்ள கொள்ளிவாய்ப் பிசாசுகளுடைய முகங்களால் ஆகாசம் நிறைந்துவிட்டது. இம்முகங்களில் தெற்றுப்பல்லுகள், நீண்டு நிறைந்து இருக்கின்றன. இந்தப் பிசாசுகள், காதுவரை நீண்டிருக்கும் கடைவாயைத் திறக்கும் பொழுது வாய்க்குள் எரியும் நெருப்பு வெளியில் தெரிகிறது. இவைகளுடைய மயிர், கண், புருவம், மீசை இவையெல்லாம் மின்னல் நிறமுள்ளவையாயிருக்கின்றன. அதோ பிசாசங்கள் கூட்டம் கூட்டமாகச் செல்கின்றன. இவற்றின் முழங்கால்கள் பேரீச்சமரமளவு உயர்ந்திருக்கின்றன. இவைகளின் கருத்த தோலும், தேஹத்தில் எங்கும் படர்ந்து ஆங்காங்கு முடிச்சு கட்டி நிற்கும் நாடிகளும், எலும்புக்கூடும், உளுத்துப் போன பெரிய முதுகு எலும்புகளும் பார்க்கப் பயமுறுத்துபவையாயிருக்கின்றன. இவைகள், பேராசைகொண்டு ஒரேயடியாய் மனித மாம்ஸங்களை வாயில் திணித்துக்கொள்கையில், சிதறி நழுவிவிழும் மாம்ஸத்துண்டங்களை ஓநாய்கள் தின்று திளைக்கின்றன. மிகத் தளர்ந்து உலர்ந்துபோன தேஹமுள்ள இப் பிசாசுகள், குஹைபோன்ற தங்களுடைய வாயிலிருந்து நாக்கை நீட்டி ஆட்டிக்கொண்டிருப்பது, காட்டுத்தீயில் எரிந்து கட்டையாக நிற்கும் பழய பெரிய சந்தன மரங்களின் பொந்திலிருந்து பெரும்பாம்புகள் வெளிக்கிளம்பி தலை ஊசலாடுவதை ஒத்திருக்கின்றது. (சிறிது நடந்து, முன்புறம் பார்த்து) ஐயோ! என்னே!! அருவருப்பு!!! ஒரு சிறிய பிசாசு தன் மடியில் ஒரு சவத்தைக் கிடத்திக்கொண்டு முதலில் சதை பெருத்திருக்கும் அச்சவத்தின் தோள் முதலிய அவயவங்களிலிருந்து தோலை உரித்து மாம்ஸத்தைச் சுளுவில் பிய்த்தெடுத்து, துர்நாற்றம் வீசும் அதனைத் தின்கின்றது. பிறகு நரம்பு, குடல் மாலை, கண், இவற்றைப் பற்களால் கடித்து இழுத்துப் பிடுங்குகின்றது. பிற்பாடு எலும்புக்கூட்டில் எங்காவது ஒட்டிக்கொண்டிருக்கும் புலாலையும் பறித்தெடுத்துப் பல்லை இளித்துக்கொண்டு கவலையற்று உண்ணுகிறது. அதோ அங்குச் சில பிசாசங்கள், சூடேறி எலும்புருகி, கொழுப்பு நீராகிப் பெருகி, புகை சூழ்ந்து வெந்துவரும் பிணங்களைப் பல சிதைகளிலிருந்தும் இழுத்தெடுத்து, அந்தச் சவ சரீரங்களிலிருந்து, நன்றாகச் சமைந்திருப்பதால் மாம்ஸம் உதிர்ந்து கணுக்காலிலும் முட்டியிலும் பிடிப்புவிட்டுத் தனியாயெடுக்கக்கூடிய முழங்கால்களைப் பிரித்துக் கைக்கொண்டு, தாமரைத் தண்டினால் ஜலத்தை உறிஞ்சிக் குடிப்பதைப்போல, இந்த முழங்கால் குழாய் வழியாக அச்சவ சரீரத்திலிருந்து தாரை தாரையாகப் பெருகும் மஜ்ஜையை (எழு தாதுக்களில் ஒன்று) உறிஞ்சிக்குடிக்கின்றன. (சிரித்துக்கொண்டு) ஆ, ஹா, பிசாசங்களுக்கு ஸந்தோஷம் முன் மாலைவேளையில் முதிர்ந்து காண்கிறது. இதோ பிசாசப் பெண் மக்கள், மங்கள :காலத்தில் கையில் கட்டும் கங்கணமாக (மஞ்சள் சரடு) சவங்களிலிருந்து உருவி எடுத்த நரம்புகளைக் கட்டிக்கொள்கின்றன. பெண் சவங்களின் உள்ளங்கைகளை எடுத்து, செங்குவளைப்பூவாகத் தலைமுடியில் சொருகுகின்றன. சவங்களுடைய ஹிருதய கமலங்களை (தாமரைப்பூபோலக் காணும் மார்பு மாம்ஸத்தை) மாலையாகத் தொடுத்து அணிகின்றன. ரத்தக் குழம்பைக் குங்குமமாக உபயோகித்துப் பொட்டு முதலியவற்றை இட்டுக்கொள்கின்றன. இந்த அலங்காரங்களெல்லாம் செய்துகொண்டபிறகு, தங்களுடைய நாயகர்களுடன் கூடிக் குலாவிக்கொண்டு, மண்டையோடுகளாகிய பாத்திரங்களில் மஜ்ஜையாகிய கள்ளை நிறைத்துக் குடிக்கின்றன. (சிறிது நடந்து 'கத்தி பட்டு......விலை'' என்பதை உரக்கக் கூறிவிட்டு) என்ன இது! இந்தப் பிசாசங்களெல்லாம் என்னைப் பயமுறுத்தப் பல துச்சேஷ்டைகளைச் செய்து காட்டிவிட்டு ஓட்டமெடுத்தனவே! ஐயோ, இவை கொஞ்சமும் வீரியமில்லாதவை (மனச்சோர்வுடன்) இச்சுடலை ஸ்தலம் முழுவதுமே தேடித் திரிந்துவிட்டேன். இப்பொழுது சுடலையின் எல்லைப்புறத்திற்கு வந்திருக்கின்றேன். இங்கே ஒரு நதி எலும்புகளையும் மண்டையோடுகளையும் புரட்டிக்கொண்டு வருகிறபடியால் கர் கர் என்று ஒலித்துக்கொண்டு ஓடுகிறது. இந்நதியின் இரு கரைகளிலும் கோட்டான்கள் கோரமாகக் கூச்சலிடுவதும், நரிகள் நான்கு புறமும் நடமாடிக்கொண்டு ஊத்து ஊளையிடுவதும், பயத்தைப் பெரிதும் படக்கின்றன.

**(திரைக்குள்:—தயை சிறிதுமில்லாத தந்தையாரே! நீர் மன்னவன் மனத்தை மலரச்செய்ய உதவும் பொருளாக உன்னியிருந்த வஸ்து இதோ ஆபத்தில் அகப்பட்டு உயிரை இழக்கப்போகிறது.)**

**மா**தவன்:—(கவலையுடன் கேட்டு) அழுகுரல் அன்றிற் பறவையின் தொனிபோல் தீனமான இந்தக் குரல் என் உள்ளத்தைக் கவருகின்றது. என் காதில் படும்போது ஏற்கெனவே பரிசயத்தில் வந்தது போலத்தோன்றுகின்றது. என் ஹிருதயம் பிளந்து சுழலுகின்றது, ஒவ்வொரு அவயமும் தளருகிறது. சரீரம் திமிர்த்து

(19-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ ரங்க ராயர்

(கி. பி. 1642 — 1672)

★

ஸி. கே. ஸ்ரீநிவாஸன்

ராஜ்யங்களின் அழிவிற்கு அவைகளின் சிற்றரசர்களின் கலகமும், வெளிநாட்டினர் படையெடுப்புமே முக்கிய காரணங்கள் என்று சொல்லலாம். தீரமில்லாத சக்ரவர்த்தியினுல் ஒரு பெரிய ராஜ்யம் ஆளப்பட்டால், அவருக்கு அடங்கி நடக்கும் சிற்றரசர்கள் தங்கள் சுயேச்சாதிகாரத்தை நிலைநாட்டும் பொருட்டு, கலகம் செய்து போராடுகிறுர்கள். இது போதாமல் பக்கத்தில் இருக்கும் அரசர்களின் ஒத்தாசையும் வேண்டுகிறுர்கள். இதுவே விஜயநகர ராஜ்யத்தின் க்ஷீண தசைக்குக் காரணமாயிருந்தது.

தலைக்கோட்டையில் நடந்த சண்டையில் விஜய நகர அரசர் தோல்வியடைந்த போதிலும், முகமதியர்கள் ராஜ்யத்தை முழுவதும் நாசம் செய்யவில்லை. சில வருஷத்திற்குள் திருமலை ராயர் தன் அதிகாரத்தை மறுபடியும் நிலைநாட்டி சிற்றரசர்களிடமிருந்து கப்பம் பெற்ருர். அவருக்கு பின் வந்த அரசர்கள் திறமையற்றவர்களாயிருந்ததால், எங்கு பார்த்தாலும் கலகம் ஏற்பட்டது. பீஜபூர் சுல்தானும், கோல்கொண்டா சுல்தானும், விஜய நகர ராஜ்யத்தின் மேல் படையெடுத்து, நாட்டின் பல பாகங்களை விழுங்கிக் கொண்டே வந்தார்கள். இச்சமயத்தில் (1642-ம் ஆண்டில்) விஜய நகர ராஜ்யத்தின் கடைசி சக்ரவர்த்தியான ஸ்ரீரங்க ராயர் பட்டத்திற்கு வந்தார். வீர்யமும், பராக்கிரமும் வாய்ந்தவராயிருந்த போதிலும், தன் ஆட்சிக்குக் கீழ் இருந்த சிற்றரசர்களுடைய துரோகத்தினுல் ராஜ்யத்தை இழந்து, அநேக கஷ்டங்களுக்கு ஆளானுர்.

## "க்ஷேமத்தை மறந்தனர்"

ராஜ்யத்தின் அம்சங்களை பலப்படுத்தி, எப்பொழுதும் ஹிம்ஸித்து வந்த முகமதியர்களைத் தோற்கடித்து, ஹிந்துக்களின் அதிகாரத்தை நிலை நாட்டுவதற்கே ஸ்ரீரங்க ராயர் தன் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டார். இந்த மஹத்தான கார்யத்தில், இக்கேரி, மைசூர், தஞ்சாவூர் இவைகளைச் சேர்ந்த அரசர்கள், சக்ரவர்த்திக்கு தங்களாலியன்ற உபகாரத்தைச் செய்தனர். ஆனுல் மதுரை நாயகனும், செஞ்சி நாயகனும், ராஜ்யத்தின் க்ஷேமத்தை மறந்து ஸ்ரீரங்க ராயரின் எதிரிகளாயினர். மதுரையைச் சேர்ந்த திருமலை நாயகன், தன் சகாவான செஞ்சி நாயகனேடு சேர்ந்துகொண்டு ராஜ்யத்தில் நிறைந்திருந்த துரோஹிகளைத் திரட்டி, கலகம் செய்ய ஆரம்பித்தான். இவருக்கு நற்புத்தி புகட்டும்பொருட்டு சக்ரவர்த்தி ஒரு சேனையுடன் தெற்கே வந்தார். திருமலை நாயகன் தனக்கு தோல்வி நிச்சயமென்று பீதியடைந்தவனுய், கோல்கொண்டா சுல்தானை, விஜய நகர ராஜ்யத்தின் தலை நகரமான வேலூரை முற்றுகைப் போடும்படி தூண்டினுன். தலை நகரத்திற்கு ஏற்பட்ட ஆபத்தினுல் திருமலை நாயகனை சிக்ஷிக்க முடியாமல் திரும்பிய ஸ்ரீரங்க ராயர், இக்கேரியை ஆண்ட சிவப்ப நாயகனின் உதவியைக் கொண்டு, கோல்கொண்டா சேனையின் தளகர்த்தரான மீர் ஜம்லாவைத் துரத்தியடித்தார். இதன் பிறகு திருமலை நாயகனும், செஞ்சி நாயகனும், சக்ரவர்த்தியின் அதிகாரத்தின் கீழ் கொண்டு வரப்பட்டனர்.

## அரசர் இறந்தார்

தோல்வி அடைந்த மீர் ஜம்லா, பீஜபூர் சுல்தானேடு சமாதானம் செய்து கொண்டு, அவருடைய துருப்புகளுடன் விஜயநகர ராஜ்யத்தின் மேல் 1946-ம் ஆண்டில் படையெடுத்தார். வெகு சீக்கிரத்தில் ஸ்ரீரங்கராயருடைய கோட்டைகளை ஒன்றின்பின் ஒன்ருக பிடித்தார். கடைசியில் தலை நகரமாகிய வேலூரை முகமதியர்கள் முற்றுகைப் போட்டனர். அக்கோட்டைக்கருகாமையில் நடந்த சண்டையில் ஸ்ரீரங்கராயர் தோல்வியடைந்தார். இதனுல் சக்ரவர்த்தி மீர் ஜம்லாவுக்கு அளவில்லாத பணம் கொடுக்க

நேர்ந்தது. இவ்வாறு எதிரிகளால் துன்புறப்பட்டவராய் மதுரை, செஞ்சி இவைகளை ஆண்டுவந்த நாயக அரசர்களின் ஒத்தாசையை நாடி தெற்கே சென்றார். ஸ்ரீரங்கராயருக்கு எப்பொழுதும் துரோகம் செய்வதிலேயே ஈடுபட்டிருந்த திருமலை நாயகன் எவ்வாறு சக்ரவர்த்திக்கு உதவி புரிய வருவார்? வீணை குதூகலத்திலும், ஆனந்த வாழ்க்கையிலும் ஸ்ரீரங்கராயர் சில நாட்களைக் கழித்தார். இதற்குள் முகமதியர்கள் சிறிதும் தடையின்றி விஜயநகர ராஜ்யத்தை கொஞ்சம் கொஞ்சமாக தங்கள் வசம் செய்து வந்தனர். நாயக அரசர்கள் தனக்கு உதவி புரியமாட்டார்கள் என்று தெரியவந்தது. இப்படி அதிகாரத்தை இழக்க நேரிட்டதால், பல கஷ்டங்களுக்கு ஆளாகி, நாட்களை காட்டில் கழித்து வந்தார். இத்தருணத்தில் ராஜபக்தியில் சிறந்த இக்கேரியின் அதிபதியான சிவப்பநாயகன், ஸ்ரீரங்கராயருக்கு உதவி செய்ய முன்வந்தான். எதிரிகளிடமிருந்து வேலூரைக் கைப்பற்றி, ஸ்ரீரங்க ராயரை மறுபடியும் சிம்மாஸனத்தில் அமர்த்தினான். சக்ரவர்த்தியும் பீஜபூர் சுல்தான் வசமிருந்த உதயகிரியை தன் வசப்படுத்திக்கொண்டார். பேருதவி புரிந்த சிவப்பநாயக்கனுக்கு சக்ரவர்த்தி அநேக வெகுமானங்களைக் கொடுத்தார்.

## அமைதி இல்லை

ஸ்ரீரங்க ராயர் ராஜ்யத்தை அடைந்த போதிலும் அமைதியுடன் ஆள அண்டையிலிருந்த முகமதிய நாடுகள் விடவில்லை. விஜய நகர ராஜ்யத்தை அறவே ஒழிக்க சபதம் கொண்டிருந்த பீஜபூர் சுல்தான், 1646-ம் ஆண்டில் தன் தளகர்த்தரான நவாப் முஸ்டாபாகானின் வசம் ஒரு பெரிய சேனையை அனுப்பினர். இவர் கீழ் சிவாஜியின் தகப்பனாரான ஷாஜி, ஒரு முக்கியஸ்தானத்தை வகித்திருந்தார். தனக்கு ஏற்பட்ட ஆபத்தை ஸ்ரீரங்க ராயர் உணர்ந்து, சமாதானத்தின் பொருட்டு தன் ஸ்தானீகரான வெங்கய்யா ஸோமாஜியை நவாபிடம் அனுப்பினர். இதே சமயத்தில், மதுரை நாயகனும், செஞ்சி நாயகனும் தங்கள் மந்திரிகளை அனுப்பியிருந்தனர். நாயக அரசர்களோடு சக்ரவர்த்தி சமாதானம் செய்துகொண்டால், பீஜபூரின் படையெடுப்பிலிருந்து தப்பலாமென்று நவாப் அறிவித்தார். இதற்கிணங்காமல் ஸ்ரீ ரங்காரயர் சண்டை செய்யத் தயாரானர். கடைசியில் நவாப்புக்கு ஐம்பது லக்ஷம் பொன்களும், 150 யானைகளும் கொடுப்பதாக வாக்குறுதி செய்ய நேரிட்டது. சுற்றியிருந்த பிரதேசத்தை ஜெயித்து, நவாப் பீஜபூரை நோக்கிச் சென்றார். இவ்வெற்றிகரமான விஜயத்திற்கு பீஜபூர் சேனையைச்சேர்ந்த ஷாஜி முக்கிய பாத்திரமாக இருந்தார்.

## வெற்றிக்கு ஹேது

திருமலை நாயகனது சுயநலக்கொள்கை கடைசியில் அவனுக்கே தீங்கை விளைவித்தது. கோல்கொண்டாவின் சேனாதிபதியான மீர் ஜம்லா விஜய நகர ராஜ்யத்தின் கிழக்கு பாகங்களை ஜயித்து 1648-ம் ஆண்டில செஞ்சியை முற்றுகைபோட்டான். தன் சகாவான செஞ்சி நாயகனுக்கு ஏற்பட்ட தீங்கைத் தடுப்பதற்காக, திருமலை நாயகன் பீஜபூர் சுல்தானின் உதவியை வேண்டினான். அவரும் முஸ்டாபா கானின் கீழ் ஒரு சேனையை அனுப்ப மதுரை நாயகன் இவர்களோடு செஞ்சி நாயகனின் உதவிக்குச் சென்றார். அங்கு எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழவே, திருமலை நாயகன் துன்பத்திற்கு ஆளானான். தனக்கு ஒத்தாசை புரிவதற்கு வந்திருந்த முஸ்டாபா கான் கோல்கொண்டா சேனையின் தளகர்த்தரான மீர் ஜம்லாவுடன்உடன்படிக்கை செய்து கொண்டு இரு சைன்யமும், மிக உத்ஸாகத்துடன் கோட்டையின் முற்றுகையைத் துரிதப்படுத்தினர். சில தினங்களில் திருமலை நாயகனும் முகமதியர்களுக்கு கீழ்படிய நேரிட்டது. இப்படியாக திருமலை நாயகன் சக்ரவர்த்தியான ஸ்ரீரங்காரயருக்கு எதிராகப் போராடி அவரது ராஜ்யத்தை இரு சுல்தான்களுக்கும் இரையாகும்படி செய்து தன்னுடைய அதிகாரத்தையும் இழந்தான். இந்த சந்தர்ப்பமே முகமதியர்களுடைய தடையில்லா வெற்றிக்கு ஹேதுவாயிருந்தது.

## ஒரு முறையீடு

ஜயிக்கப்பட்ட பிரதேசங்களையும் பங்கிட்டுக் கொள்வதில் கூட்டாளிகளாயிருந்த கோல்கொண்டாவிற்கும், பீஜபூருக்கும் சச்சரவு ஏற்பட்டு சண்டையிடவும் நேரிட்டது. பீஜபூர் தளகர்த்தரான ஷாஜி மீர் ஜம்லாவைத் தோற்கடித்து ஸ்ரீரங்காரயரின் தலைநகரமாகிய பேனுகொண்டாவைக் கைப்பற்றினர். இதனுல் சக்ரவர்த்தி, மைசூரின் அரசரான கண்டீரவ நரஸ ராஜரின் உதவியைப் பெற அங்குச் சென்றார். அவருடைய உதவியால் சக்ரவர்த்தி தன் ராஜ்யத்தின் சில பாகங்களை ஜயித்தார். ஆனுல் பீஜபூர் சைன்யம் மறுபடியும் வேலூரை முற்றுகை போட்டு, ஸ்ரீரங்காரயரை சந்திரகிரிக்கு ஓடும்படி செய்தது. திக்கற்று தடுமாறும் இந்த சமயத்தில், ஸ்ரீ ரங்காரயர் தக்ஷிணத்திற்கு வைஸிராயாயிருந்த ஔரங்கசீப் மூலம் தான் மொகலாய ஜாகீர்தாராயிருப்பதாகவும், வேண்டுமானுல் முகமதியமதத்தை தழுவவும் தயாராயிருப்பதாகவும், சக்ரவர்த்தியான ஷா ஜஹானுக்குத் தெரிவித்தார். இந்த வேண்டுகோளுக்கு டில்லியிலிருந்து பதில் வந்ததாகத் தெரியவில்லை.

## இறந்த தேதி

மீர்ஜம்லா தன்னுல் ஜயிக்கப்பட்ட பிரதேசத்திற்கு அதிபதியாக முயன்ருன். இதற்கு கோல்கொண்டா சுல்தான் சம்மதிக்காததால் கோபங்கொண்டு மொகலாய சக்ரவர்த்தியை சந்திப்பதற்காக டில்லிக்குச் சென்ருர். மீர்ஜம்லாவின் பிரயாணம் ஸ்ரீரங்கராயருக்கு அனுகூலமாயிருந்தது. ஏனென்றுல் அவர் 1656-ம் ஆண்டில் தனக்கு சொந்தமான சிலபாகங்களைத் தன் வசப்படுத்தி கோல்கொண்டாவைச் சேர்ந்தவர்களைத் துரத்துவதற்கு முயன்ருர். ஆனுல் மீர்ஜம்லாவின் சேனைத்தலைவரான துப்பாக்கி கிருஷ்ணப்பநாயகன் ஸ்ரீரங்க ராயரை தோற்கடித்தான். இதனுல் இவருடைய அதிகாரம் குன்றியது. கோல் கொண்டாவும் விஜயநகர ராஜ்யத்தை ஜெயிப்பதில் மும்முரமாக கவனத்தைச் செலுத்தியது. ஆகவே 1668-ம் ஆண்டில் கர்ணுடகம் முழுவதும் கோல் கொண்டா சுல்தானின் வசம் விழுந்தது. என்றே சொல்லலாம். ஸ்ரீ ரங்க ராயர் மகத்தான ராஜ்யத்தையிழந்து, அங்குமிங்கும் அலைய நேரிட்டது. கிழக்கிந்திய கம்பெனியாரால் எழுதப்பட்ட கடிதத்திலிருந்து 1672-ம் ஆண்டில் ஸ்ரீரங்காரயர் இறந்தாரென்பது நமக்குத் தெரிய வருகிறது.

## பரிதாப நிலை

வெங்கடபதி ராயருக்குப் பிறகு வந்த சக்ரவர்த்திகளுக்குள், ஸ்ரீ ரங்காரயரே தைர்யமும், புத்திசாலித்தனமும் படைத்தவரென்று கருதவேண்டும். விடா முயற்சியே இவருடைய குணங்களில் சிறந்து விளங்கிற்று. துர்பாக்கியத்தினுல் விளைந்த துன்பங்களைப் பொருட்படுத்தாமல் பொறுமையே போக்கிஷமென்று கருதி, நாளுக்குநாள் க்ஷீணதசையை அடையும் விஜயநகர ராஜ்யத்தைப் பலப்படுத்த அரும்பாடு பட்டார். சிற்றரசர்களின் துரோகத்தாலும், முகமதியர்களுடைய படையெடுப்பினுலும், இங்குமங்கும் துரத்தப்பட்டு ராஜ்யத்தை யிழந்து, கானகத்தில் வசிக்க நேரிட்டது. ஸ்ரீரங்காராயருடைய பரிதாப நிலைமைக்கு திருமலை நாயகனே முக்கிய காரணமாக இருந்தானென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஒத்தாசை செய்யாமல் சக்ரவர்த்தியை ஒழிக்க முகமதியர்களை விஜய நகர ராஜ்யத்தின் மேல் படை யெடுக்கச் சொன்னது அவனே. இந்த யுக்தி கடைசியில் மதுரை நாயகனுக்கே தீங்கைவிளைவித்தது. சண்டையிடும் சிற்றரசர்களால் ஆளப்பட்டு துரோகிகள் நிறைந்த ஒரு ராஜ்யம் ஓங்கி வளர்வதற்கு சந்தர்ப்பம் ஏது? சக்ரவர்த்தி எவ்வளவு திறமை வாய்ந்தவராயிருந்த போதிலும் அவருக்கு அடங்கியிருக்கும் சிப்பந்திகள் ஒத்துழைக்காவிட்டால், அவரெடுக்கும் முயற்சிகளெல்லாம் வீணே. இதன் உண்மை ஸ்ரீரங்காரயருடைய ஜீவிய சரித்திரத்திலிருந்து நன்கு விளங்குகிறது.

# புனருத்தாரணம்

## சிறு கதை ★ பார்த்தசாரதி

இப்பொழுது, அதாவது இவ்விருபதாம் நூற்றுண்டில், கிராமப் புனருத்தாரணமென்னும் விஷயம் தான் எங்கும் பேசப்படுகிறது. ஸர்வகலாசாலைப்பட்டமளிப்பு ப்ரஸங்கங்களில் "கிராமத்திற்குப் போ" என்ற வார்த்தைகளே பட்டதாரிகளுக்குப் புத்திமதிகளாக அளிக்கப்படுகின்றன. கலாசாலை வருஷாந்தரப்போட்டியில் தலைமை வகிக்கும் ஒரு திவான் பஹதூரும் இதையே கூறுகின்றுர். 'ஆனந்த பவன்' ஹோட்டலின் கிளையைத் திறந்து வைக்கும் நகரமேயரும் இவ்விஷயத்தை எப்படியோ தனது பேச்சில் புகுத்திவிடுகிறுர். அதிகம் கூறுவானேன்? இப்படிப்பேசுவதுதான் இக்காலத்தின் லக்ஷணம் போலும்! 'கிராமத்திற்குப் போவதற்கும், பின்னிட்டு அங்கு உத்தாரண வேலை செய்வதற்கும் வேண்டிய சாதனங்களை ஏற்படுத்திக்கொடுக்கும் பொறுப்பை இச்சொற்பொழிவாளர்கள் ஏனே வெகு அழகாக மறந்து விடுகின்றனர்!

இவ்வுண்மைகளெல்லாம் பத்தாவது வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கும்பொழுது எனக்குப் புலப்படவில்லை. அன்றைய தினம் எங்கள் ஸ்கூலின் வருஷாந்தரக் கூட்டம். அதற்குத் தலைமை வகித்த ஒரு கனம் பொருந்தியவர் (சரீரத்திலும்கூட) ஸ்கூலில் வாசிக்கும் சிறுவர்களும் சிறுமிகளும் தங்கள் தங்கள் கிராமத்திற்கு விடுமுறை நாட்களில் சென்று கிராமப் புனருத்தாரண வேலை செய்ய வேண்டியதன் அவசியத்தை வெகு நன்றாக எடுத்துரைத்தார். அவ்வளவுதான். உடனே கிராமத்திற்குச் செல்ல வேண்டுமென்ற ஆசை என்னை உந்தியது. 'உடனே புறப்பட்டு விடலாமா?' என்று யோசித்தேன். ஆனால் அடுத்த வாரத்தில் வரும் பரீக்ஷைகளின் ஞாபகம் வரவே உத்ஸாஹம் வெகுவாகக் குறைந்துவிட்டது. ஒருவாறுகப் பரீக்ஷைகளை முடித்துக்கொண்டேன். எப்படி எழுதினேன் என்பதைப் பற்றிக்கூட கவலைப்படவில்லை. நான்கு வருஷங்களாகப் போயறியாத எனது அருமைக் கிராமத்திற்கு எனது நண்பன் ஒருவனுடன் சென்றேன். ஹெட்மாஸ்டரிடம் விஷயத்தைச் சொல்லி விடை பெற்றுக் கொள்ளும்பொழுது அவர் ஓர் புன் சிரிப்புச் சிரித்தார். அதன் அர்த்தம் என்ன? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எனது நண்பன் கிராமப் புனருத்தாரணத்திற்கு இன்றியமையாத 'ஷேவிங் ஸெட்' 'ஸிகரெட் டின்கள்' 'கிரிக்கெட் பாட்' முதலிய முஸ்தீப்புகளுடன் கிளம்பினுன்.

கிராமத்தில் வந்திறங்கியவுடன் இரண்டு நாட்கள் சிரமபரிஹாரம் செய்துகொண்டோம். பின் கிராமத்தை எப்படிச் சீர்திருத்துவது என்பதைப்பற்றித் தீவிரமாக யோசனை செய்தோம். அந்த 'கனம் பொருந்தியவர்' தனது $1\frac{1}{2}$ மணிப் பேச்சில் புனருத்தாரணம் செய்ய வேண்டிய முறைகளைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையென்பது இங்கு குறிப்பிடத்தக்கது. எப்படியோ ஒருவிதமாக சீர்திருத்த வேலையை அடுத்த நாளிலிருந்தே தொடங்கிவிடுவது என்று தீர்மானித்தோம்.

'பிரஸங்கங்கள் மூலம் கிராமச் சீர்திருத்தத்தைச் செய்வது மிகவும் சுலபம். இம்முறைதான் வெகு சீக்கிரத்திலேயே பலனையளிக்கும், என்பது எனது நண்பனின் திடமான அபிப்பிராயம். ஆதலால் அடுத்த நாள் ஆற்றங்கரையில் ஓர் கூட்டம் போட்டேன். எனது பாட்டியுள்பட எல்லோரும் கூட்டத்திறகு $5\frac{1}{2}$ மணிக்கே வந்துவிட வேண்டுமென்று உத்தரவிட்டேன். ஆனாலும் $7\frac{1}{2}$ மணிவரையில் ஒருவரும் வரவில்லை. ஏழரை மணிக்கு முனியன் ஒரு ஜதை உழவு மாடுகளுடனும் தோளில் கலப்பையுடனும் காட்சியளித்தான். சிறிது நேரங்கழித்து எனது பாட்டி கையில் இரண்டு அப்பளாம் சுட்டு எடுத்துக்கொண்டு வந்து சேர்ந்தாள். அரைமணி நேரங்கழித்துச் சாணுன் சம்பந்தம் வலது கையில் அரிவாளுடனும் இடது கையில் ஒரு குலைத்தேங்காய்களுடனும் ஆஜர் ஆனுன். ஒருவாறுக என்னையும் எனது நண்பனையும் சேர்த்து மொத்தம் ஏழுபேர் கூடவே, நான் கூட்டத்தைக் கூட்டினேன்.

எனது நண்பனுக்கு விஞ்ஞானத்தில் மிகுந்த பைத்தியம் உண்டு. ஆதலால் அவன் பேசவேண்டிய விஷயங்களையெல்லாம் விட்டு விட்டு மின்சாரத்தைப்பற்றித் தனக்குத் தெரிந்ததையெல்லாம் எடுத்து வீசினுன். நான் என்ன சொல்லியும் நிற்கவில்லை. இதற்குள் 'அட ராமா! நான் ஏதோ ராமாயணம் சொல்லுவான்னு நினைச்சேன்!' என்று சொல்லிக்கொண்டே எனது பாட்டி மிகுந்த அதிருப்தியுடன் அவள் எழுந்து போய்விட்டாள். 'பாஸிடிவ்', நெகடிவ்', 'டன்கன் வயர்' என்று சொனனல் கிராமத்தார்களுக்கு என்ன புரியும்? ஆனுல் எனது நண்பனின் உத்ஸாஹம் கரைபுரண்டு ஓடியது. அடுத்தபடியாக 'எக்ஸ்ரேயின்' குணதிசயங்களைப் பற்றிக் கண்ணை மூடிக்கொண்டே சரமாரியாகப் பொழிந்தான். ஒரு பெட்டியிலுள்ள சாமான்களைக்கூட பெட்டியைத் திறக்காமலேயே பார்த்துவிடலாம் என்று சொன்ன பொழுது கிராமத்தார்களுடைய ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. வாய் திறந்தவாறே கேட்டனர்.

மேலும் டெலிவிஷனைப்பற்றி எனது நண்பன் பேசியபொழுது கூட்டத்தில் எல்லோரும் ஒவ்வொருவராக நழுவிவிட்டனர். அத்துடன் நானும் கூட்டத்தைக் கலைத்துவிட்டேன். எனது நண்பனுக்கு மிகுந்த ஏமாற்றம்.

இந்தக் கூட்டத்திலிருந்து ஒரு சீர்திருத்தம் எங்களையுமறியாமல் ஏற்பட்டது. உபன்யாஸத்தின நடுவே நடுவே எனது நண்பன் ஸிகரெட் சாப்பிடும் வழக்கத்தை மிகுந்த சிரத்தையுடன் முனியன்எனது நண்பனிடம் கற்றுக் கொண்டேன். நாட்டுபீடி நகரத்து பீடிக்கு இடம் கொடுத்தது. எப்படி எங்களுடைய முதல் சீர்திருத்தம்!

மறுநாள் காலை நானும் எனது நண்பனும் தூங்கியெழுந்து வாசற் பக்கம் வந்தபொழுது எங்களுக்குத் தூக்கிவாரிப்போட்டது. வாசலின் முன் நூற்றுக் கணக்கான பசுக்களும் கழுதைகளும் எருமைகளும் நின்றுகொண்டிருந்தன. எங்களுக்கு விஷயமொன்றும் புரியவில்லை. அதற்குள் முனியன் 'ஏதோ எக்ஸ்ரே உடம்புக்கு உள்ளேயிருக்கறத்தையெல்லாம் காண்பிக்கும்னு சொன்னீங்களே! இந்த பசு வவுத்திலே கிடாரியா காளையா என்று பார்த்துச் சொல்லுங்க" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான். நாங்கள் சிரிப்பதா அழுவதா? இதே கேள்வியை இன்னெரு மூலையில் இருந்து வண்ணுன் முருகன்கேட்டான். தனது கழுதையை எங்கள் முன் கொண்டு வந்து நிறுத்தினுன். நாங்கள் ஒருவாறுகச் சமாளித்துக் கொண்டு எல்லோரையும் வீட்டிற்கு அனுப்பினேம். எனது நண்பன் தனது தோல்வியை முணு முணுத்துக் கொண்டே ஒப்புக்கொண்டான்.

நான் என்னுடன் ஸினிமா மெஷின் ஒன்று கொண்டு வந்திருந்தேன். அதன் மூலமாகப் படங்கள் காண்பித்துக் கிராமத்தார்களைச் சீர்திருத்தலாமென்று எண்ணியதில் தவறு என்ன? இதுதானே அறிவாளிகளின் அபிப்பிராயமுங்கூட! கிராமத்தின் வடக்கு மூலையிலுள்ள பிள்ளையார் கோவிலைச் சினிமாக் கொட்டகையாக மாற்றிக்கொண்டோம். நன்றுக இது விஷயத்தை விளம்பரப் படுத்திக்னேம். முனியனும் அவனது ஸகாக்களும் எனது நண்பன் கொடுத்த ஸிகரெட்டுடன் சினிமாப் பார்க்க வந்தான். இது எனது நண்பனின் வெற்றி. எங்களுடைய சீர்திருத்தம் எப்படி புகையெனப் பரவியது பார்த்தீர்களா?

கிராம வாசிகளெல்லோரும் வாயைத் திறந்துகொண்டே படத்தை வெகு ஸ்வாரஸ்யத்துடன் பார்த்தனர். இச்சந்தர்ப்பத்தில் கதாநாயகனும் அவனுடைய எதிரியின் ஆட்களும் சண்டை போடும் கட்டம் வந்தது. பிடித்தது ஆபத்து. இதை உண்மைச் சண்டையென்று நினைத்து கிராமவாசிகள் "டேய் அவன் ஒண்டிக்காரன்னுஞ பார்த்தே. இதோ உன்னை விடறேனு பாரு" என்று கத்திக்கொண்டு அவரவர்களுக்கு அகப்பட்ட ஆயுதங்களுடன் திரையோடு (திரையிலுள்ள ஆட்களோடு) சண்டை போட்டு அதைக் கிழித்து விட்டனர். ஸினிமா மெஷின் தப்பியது எனது அத்ருஷ்டமென்றே சொல்ல வேண்டும். ஸினிமாப்படத்தை நான் நிறுத்தி விடவே ஸினிமாச் சண்டை நின்றது. அது நிற்கவே இவர்களுடைய உண்மைச் சண்டையும் நின்றது. இப்பொழுது கிராமச் சீர்திருத்தத்திலுள்ள எங்களுடைய ஊக்கம் விடைபெற்றுச் செல்ல ஆரம்பித்தது.

சீர்திருத்த வேலையை இரண்டு நாட்களுக்கு நிறுத்தி

(18-ம் பக்கம் பார்க்க)

கிராமப் புனருத்தாரணம்! எங்கு பார்த்தாலும் இதே பேச்சுதான். வாய் கூசாமல் எல்லோரும் இதை வற்புறுத்துகின்றனர். அனுபவசாத்தியமா? அனுபவம் எவ்விதம் முடியும்? இதைப் பற்றிப் பேசுவோருக்கு சிந்தனையில்லை. இந்தச் சிறு கட்டுரையில் ஒருவித அனுபவம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பரிகாசமாக எழுதப்பட்டிருக்கிறது. இதனுல் கிராமப் புனருத்தாரண கைங்கர்யத்தை இழிவாக நினைக்கவேண்டாம்!

## ராணியின் பரிவு



(வலது) எலிஸபெத் ராணி விமானப்படையெடுப்பில் காயமடைந்தவருக்காக நியூஜிலாந்திலிருந்து வந்த உதவிப் பொருள்களைப் பார்வையிடுகிறார்.



## 'விக்டரி' கப்பல்

(இடது) பிரிட்டிஷ் கடற்படைத் தலைவரும் மிஸ்டர் சர்ச்சிலும் கப்பலைவிட்டிறங்குகின்றனர். இவர்களுக்குப் பின்னே காணப்படுவது லார்ட் நெல்ஸன் சுமார் 150 வருஷங்களுக்கு முன்பு வெற்றியுடன் உபயோகித்த "விக்டரி" கப்பல்.

## லண்டனில் மென்ஸிஸ்




(வலது) ஆஸ்திரேலியப் பிரதமமந்திரி மிஸ்டர் ஆர்ஜி மென்ஸிஸ் இப்போது லண்டன் வந்திருக்கிறார். படத்தில் அவர் பலதேசப் பத்திரிகா பிரதிநிதிகள் முன் பிரசங்கம் புரிவதைப் பார்க்கலாம்.

# அரச குடும்பத்தார்

(வலது)

மிகவும் வேகமாகச் செல்லும் பிரிட்டிஷ் கப்பல் "ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்"





(இடது)

புதிய பாதுகாப்பு ஏற்பாடொன்றை மிஸஸ் சர்ச்சிலும் மிஸ்டர் மாரிஸனும் பார்வையிடுகின்றனர். இந்த ஏற்பாட்டிற்கு "டேபிள் ஷெல்டர்" என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

(மேல் வரிசை) ராஜ குடும்பத்தார்:—வின்ஸர் கோமகனும் அவரது மனைவியும் பஹாமாவில் யுத்த உதவியில் முனைந்திருக்கின்றனர். 2 க்ரீஸுக்குப் போகும் ஆம்புலன்ஸ் கார்களை கெண்ட் கோமகனின் மனைவி பார்வையிடுகிறார்.

நவ நாகரீகம்

# ஒரு வளையல்

★

## காசினி எழுதியது

* * * 'அஞ்சு நிமிஷம் இருங்கோ, இதோ வந்து விட்டேன்! அடே பையா, அந்த 'மெடல் பாலீஷ்' டப்பாவை எங்கேடா வச்சு விட்டாய்?' என்று கேட்டுக் கொண்டே, தன் டிரஸிங்—ரூம் மேஜையில் கிடந்த சாமான்களிடையே நளினதேவி அவசர அவசரமாகத் தேடினாள்.

'நாழி கழிச்சுப் போனா அப்புறம் ஒரு 'கேம்' தான் ஆட முடியாது! ஸ்திரீகள் புறப்பட ஆனாலும் நாழிகை பண்ணுவார்கள் என்று புருஷா சொல்லுவதில் நிஜமில்லாமல் இல்லை!' என்று பங்கஜம் சலித்துக் கொண்டாள்.

பங்கஜம் இப்போ பாட்மின்டன் ஆட நன்றாகக் கத்துக் கொண்டு விட்டாள். இதனால் இவளுக்குக் கிளப்பிற்குப் போவதில் இப்போ ஒரு அலாதி ஊக்கம் ஏற்பட்டிருக்கிறது. கிளப்பிற்குப் போகும் வழியில் ஏதோ காரியமாக நளினதேவி வீட்டிற்குச் சென்ற என்னுடன், பங்கஜமும் வர நேரிட்டது.

பங்கஜம் அவசரப்படுத்தியும் நளினதேவி அசைவதாகக் காணோம். 'எங்கேதான் அந்த டப்பா போயிருக்கும்? பையா?' என்று மறுபடியும் கூப்பிட்டாள். அவர்கள் வீட்டு வேலைக்காரப் பையனும் ஒரு சிறிய டப்பாவுடன் வந்தான்.

'எத்தனை தரம் இந்த டப்பாவை எடுக்கக் கூடாது என்று உனக்குச் சொல்லுவது?' என்று நளினதேவி அவனைக் கோபித்துக் கொண்டே, டப்பாவில் இருந்த பாலிஷில் கொஞ்சம் எடுத்துத் தன் கையில் இருந்த வளையலுக்கு மெருகு போட்டாள்.

'ஐயா தான் இதைக் கொண்டு போய் தன் மேஜையில் வச்சிருந்தார்; நான் ஒன்றும் எடுக்கவில்லை!' என்றான் பையன்.

'சரி; வேலை இருந்தால் பாரு! நாம் போகலாமா?' என்றாள் நளின தேவி.

'அது என்னமெருகு போட்டீர்கள்?' என்றாள் பங்கஜம், நளின தேவி தன் கையை நீட்டினாள். ஒரு அகலக் கண்ணாடி வளையல். இது ஒரு தினுசுத் தேன் வர்ணமாக இருந்தது. இரு பக்கத்திலும் ஆழ்ந்த நீல நிற உருண்டையான கண்ணாடி வளையல், மூன்று வளையல்களையும் சேர்த்து கொஞ்ச தூரம் விட்டு விட்டு பித்தளைப் பூண்கள் போட்டு இசைத்திருந்தது. பூண்களின் மேல் கொத்துக் கொத்தாகப் பித்தளைச் சலங்கைகள்கோத்து இருந்தது. இந்தப் பூண்டுகளுக்கும் சலங்கைகளுக்கும் தான் நளினதேவி மெருகு போட்டாள். இந்த வளையலை ஜதையாக அணிவதில்லை. ஒரு கையில் மட்டும் ஒத்தை வளையலாகப் போட வேண்டும். இதுதான் பாஷன். வளையல் விலை என்னமோ நாலு அணாக்கள்தான். மெருகு போட்டே போட்டுக்கொள்ள வேண்டும்; இதுதான் இதில் ஒரு தொல்லை;

* * * *

### ஒரு புடவை

'நேற்று நான் ஒரு புடவை பார்த்தேன்; ரொம்பவும் நன்றாக இருந்தது' என்று நளினதேவி கிளப்பிற்குப் போகும் வழியில் சொன்னாள்.

'என்ன புடவை?' என்று பங்கஜம் உடனேயே கேட்டாள்.

'ஒரு கடையில் ஜன்னல் பக்கமாக வைத்திருந்தது. ஒரு மாடல் பொம்மைக்கு உடுத்தி இருந்தது. புடவை இன்னும் கண்முன் நிற்கிறது!' என்று பங்கஜத்திற்கு பதில் சொல்லாமல், நளினதேவி புடவையைப் பற்றி விவரித்தாள்.

'அந்த இலைகள் போட்ட புடவைதானே?' என்றேன்.

ஆமாம் என்று நளினதேவி தலையை அசைத்தாள். அவள் சொன்ன மாதிரியில் புடவை என்னமோ ரொம்பவும் அழகாகத்தான் இருந்தது. ஆழ்ந்த கனகாம்பர வர்ண உடல்; பட்டு நல்ல உறுதியாகவும், மெல்லியதாகவும் இருந்தது. இதில், இலைகள் மாதிரியில் போட்டிருந்தது. இலைகளை அதிக நெருக்கம் இல்லாமலும், தூர, தூர, இல்லாமலும் போட்டிருந்தது. இலைகள் சுமாருக்குச் சிறிய மாவிலை நீளம் அகலம் இருந்தது. இதில் நரம்புகள் ஓடுவது போல் சரிகையில் வேலை செய்திருந்தது. ஏற்றாப் போல் சரிகை வேலை செய்த தலைப்பும் கரையும் போட்டிருந்தது; ஆறு கஜம் புடவையின் விலை தொண்ணூற்றி ஏழு ரூபாய்கள் என்று கடைக்காரன் சொன்னான். ஆனால் புடவையின் வேலைப் பாட்டிற்கும் செய் நேர்த்திக்கும் விலை அதிகம் என்று சொல்லுவதற்கில்லை.

* * * *

(23-ம் பக்கம் பார்க்க)

# கும்பினியார் நாளிலே

## தி. நா. சுப்ரமணியம்

'யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்' என்பது நம் நாட்டுப் பழமொழி. அதே போல கும்பினியார் நாளிலே இந்தியாவில் ஊழியம் செய்து வந்த ஸிவில் ஸர்விஸைப்பற்றி 'இருந்தாலும், இறந்தாலும் முன்னூறு பவுன்' என்ற பழமொழி ஒன்று இங்கிலாந்தில் உண்டாயிற்று. அது எப்படி ஏற்பட்டது என்பது உங்களுக்குத் தெரியுமா?

இரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்நாட்டிலிருந்த ஆங்கிலேயர்கள் இங்கிலாந்திலிருந்து வரும் கப்பலை எதிர் நோக்கியே இருப்பார்கள். கப்பல் வந்து சேர்ந்து விட்டால் அப்பால் ஒரு வார காலத்திற்கு அவர்களுக்கு ஓய்வு ஒழிவு என்பதே இல்லாமல் போய் விடும். அவர்களுக்கு வேண்டிய பொருள்கள் பல அந்தக் கப்பலில் வரும். அவற்றுள் முக்கியமானவை தங்கள் ஊரிலிருந்து வரும் கடிதங்கள். அம்மட்டிலோ, அடுத்தபடியாக உடன் வரும் கன்னிப் பெண்களைக் கூறலாம்.

அவ்விதம் இங்கிலாந்திலிருந்து இந் நாட்டுக்கு வரும் கன்னிப் பெண்களில் பல ரகம். பள்ளிக்கூடத்தைவிட்ட சிறுமியிலிருந்து ஐம்பது வயது சென்ற கிழவி வரையில் அழகிகளும், குரூபிகளுமாகக்கலந்து பலவகையினர் இருப்பர்.

அவர்கள் ஐயாயிரம் மைல்களுக்கப்பால் உள்ள இந் நாட்டுக்கு, தங்கள் ஊரை விட்டு உறவினரை விட்டு எதற்காக வருகிறார்கள்?—தங்களைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடிய புருஷர்களைத் தேடித் தான்.

### கும்பினியார் தயவு

அக்காலத்திலே இந் நாட்டுக்கு வந்து தங்கியிருந்த ஆங்கிலேயர்களுள் பெரும் பன்மையோர் கும்பினியைச் சேர்ந்தவர்கள். கும்பினியாரிடம் உத்தியோகம் வகித்தவர் பலர். அவர்களுடைய அனுமதி பெற்றுத் தனித்து நின்று வியாபாரம் செய்தவர் சிலர். எப்படியாயினும் அவர்கள் வாழ்க்கை கும்பினியாரின் தயவைப் பொறுத்திருந்தது.

அந்த ஆண்மக்களும் இந் நாட்டுக்கு வந்ததற்கு வியாபாரம் செய்து பொருள் சேர்க்கலாம் என்ற ஆசைதான் முக்கிய காரணம். அக் காலத்தில் இந்தியாவில், பணம் காய்க்கும் மரம், வளர்ந்து வந்தது என்றும், ஒருவன் போய் அதைக் குலுக்கிக் கீழே உதிரும் பணத்தைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு வரலாம் என்றும் அந்நாட்டு மக்கள் நினைத்தார்கள். இங்கேயும் நிலைமை சற்றேறக்குறைய அவ்விதம் தான் இருந்தது. செல்வத்தில் செழித்திருந்த இந் நாட்டில் வந்தவர்கள் பொருள் ஈட்டிச் சேர்த்துக்கொள்ளாமல் திரும்பியது மிகவும் அபூர்வம்.

அப்பொழுதெல்லாம் நீராவிக் கப்பல் கிடையாது; பாய் மரக் கப்பல்தான். இங்கிலாந்திலிருந்து இங்கே வந்து சேரக் குறைந்தது ஆறு மாத காலமாவது பிடிக்கும். அதனால் ஒரு தடவை இவ்விடம் வந்து போக வேண்டுமானால் குறைந்தது ஒரு வருஷ காலமாவது கடலிலே கழிக்க வேண்டும். இவ்விடத்திலும் அவர்கள் தங்கள் நாட்டிலிருப்பதுபோல வாழ முடியாது. வெய்யிலின் கொடுமை தாங்கமுடியாமல் அதிகமாக இருக்கும். அதனால், ஆண் மக்கள் பொதுவாகத் தனியாக இவ்விடம் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். நாளாக ஆக பயம் குறைந்து பெண் மக்களும் வந்து போக ஆரம்பித்தார்கள். ஆனாலும் வேண்டிய அளவு இல்லை.

### விவாக விஷயம்

இங்கிலாந்திலிருந்து இந்நாட்டுக்கு வரும் ஆண் மக்கள் இங்கே ஒரு குறிப்பிட்ட காலம் உத்தியோகம் செய்தால் தான் ஊர் திரும்பலாம். அந்தக் காலத்தை அவர்களில் எவ்வளவு பேர் ஏகாங்கிகளாகத் தள்ளமுடியும்? அவர்களுக்கு முன் இங்கே வந்திருந்த போர்ச்சுகீசியர், உலாந்தாக்காரர், பிரெஞ்சு மக்கள் ஆகியோர்களிடை வாழ்ந்து வந்த பெண்களைக் கலியாணம் செய்து வாழ்க்கை நடத்தி வந்தனர் சிலர். இந்நாட்டுப் பெண்களையே மணந்து வாழ்ந்தனர் மற்றும் சிலர். தங்கள் தாய் நாட்டிலிருந்து வரக்கூடிய பெண்களுக்காகக் காத்திருந்தனர் மற்றையோர்.

கன்னிப்பெண்களைத் தேடிப் பிடித்து இந்நாட்டுக்கு அனுப்பும் பணியை முதன் முதல் மேற்கொண்டவர் போர்ச்சுகீசிய மன்னர்; ஆங்கிலக் கும்பினியாரும் அவ்விதமே செய்தார்களா என்பது நிச்சயமாக விளங்கவில்லை; என்றாலும் அவர்களுடைய அனுமதி பெற்றே ஆங்கிலப் பெண்கள் புருஷர்களைத்தேடி இவ்விடம் வந்தனர் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

அவ்விதம் இந்நாட்டுக்கு வந்த பெண்களுள் அநேகருக்குத் தங்கள் நாட்டில் தக்க புருஷர்கள் கிடைக்காமையே அவர்களை இங்கே வரத் தூண்டியது. இங்கே வந்து புருஷனை மணந்து சிறிதுகாலம் தங்கிவிட்டு ஊர்திரும்பினால் பின்னால் ஸௌக்யமாகவாவது வாழ்க்கை நடத்தலாம் என்ற எண்ணம் சிலருக்கு.

### 'புருஷன் கிடைப்பான்'

எப்படியும் அவர்களுக்கு இங்கே வந்தால் புருஷன் கிடைப்பான் என்ற நம்பிக்கை மட்டில் உண்டு. அவ்விதமே வந்த இரண்டு மூன்று தினங்களுக்குள் கட்டாயம் ஒருவன் கிடைத்து விடுவான் அது எப்படி? தெரியுமா?

ஊரை விட்டுக் கிளம்பும் பொழுதே அந்தக் கன்னிப் பெண்கள் இங்கே வந்து இறங்கியதும், இரண்டு மூன்று நாட்கள் தங்குவதற்கு வேண்டிய ஸௌகரியங்களைச் செய்து கொண்டு விடுவார்கள். இங்கே இருக்கும் உத்தியோகஸ்தர்களுடைய உறவினரிடமிருந்தோ சிநேகிதர்களிடமிருந்தோ அவர்களுக்குச் சிபார்சுக் கடிதம் பெற்றுக்கொள்வார்கள். வந்தவுடன் அவர்கள் வீட்டுக்குச் சென்று அந்தக் கடிதங்களை கொடுத்து அறிமுகம் செய்துகொண்டு அங்கே தங்குவார்கள்.

இங்கேயுள்ள ஆண்மக்களிடம் இந்தச்செய்தி காட்டுத்தீ போலப் பரவிவிடும். இது ரகசியமான சமாசாரம் அன்று. அவர்களும் அதை அவ்விதம் வைத்துக்கொள்ள விரும்பவில்லை. சில சமயம் இச்செய்தி பகிரங்கமாகவும் வெளியிடப் படுவதும் உண்டு.

இவ்விதம் கல்யாணத்தை உத்தேசித்துக் கன்னிப் பெண் வந்து தங்கியிருக்கும் வீட்டுக்கு அந்த நகரத்தில் உள்ள ஆண் மக்கள் அனைவரும் மூன்று நாளைக்குத் தாராளமாக வந்து போகலாம். அழைப்பு வரவேண்டும் என்று எதிர் பார்த்திருக்க வேண்டியதில்லை. அவ்விடம் போனால் அந்தப் பெண் கண்ணில் அகப்படாமல் தப்பமாட்டாள். அவளைக் கட்டாயம் பார்க்கலாம்.

பொதுவாக அவ்விதம் வருவோர் மாலை வந்து போவார்கள். நடுநிசி வரையில் அது தொடர்ந்து செல்லும். அந்தச் சமயத்தில் வந்திருக்கும் பெண்ணைக் கொலுவில் பொம்மையை வைத்திருப்பது போலச் சிங்காரித்து முன்புறத்து ஹாலில் உட்கார வைத்திருப்பார்கள். கல்யாணம் செய்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லாதவர்களும் ஏதாவது ஒரு சாக்கை வைத்துக் கொண்டு போய் வேடிக்கை பார்த்து வருவதும் உண்டு.

### கேள்வி எது?

அந்த மூன்று நாட்களுக்குள்ளேயே கல்யாணம் நிச்சயமாகிவிடும். பெண்ணைப் பார்க்கப் போகிறவர்களுக்கு அவள் புருஷனைத் தேடியே வந்திருக்கிறாள் என்ற செய்தி நிச்சயம் தெரியும். ஆகவே அவள் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டப்படுகிறாளா, இல்லையா என்ற ஸந்தேகம் உண்டாகக் காரணம் கிடையாது. யாரை மணந்து கொள்ளப் போகிறாள் என்பதே கேள்வி.

பெண்களுக்கு வேறொரு விதமான குழப்பம் வந்துவிடும். வந்தவர்களை எல்லாம் தட்டிக் கழித்து விட்டால், கடைசியில் நல்ல வரன் கிடைக்காமல் போய்விட்டால் என்ன செய்வது என்ற கவலை ஒருபுறம். ஆத்திரம் பொறுக்க முடியாமல் வந்த வரனை ஏற்றுக் கொண்டுவிட்டால், பின்னால் வரும் நல்ல வரனைக் கண்டு மனம் புழுங்க நேரிடுமே என்ற கவலை மற்றொருபுறம். இரண்டுக்கும் மத்தியில் அகப்பட்டுத் தவிப்பாள்.

பல சமயங்களில் அவள் தங்கியுள்ள வீட்டுக்காரரும் உதவி செய்வார்கள். எவ்வித மாயினும் அந்த மூன்று நாட்களுக்குள் அந்தப் பெண்ணுக்கு அநேகமாக நிச்சயமாகிவிடும்.

உறவினர், தெரிந்தவர், ஒருவரும் இல்லாதவர் என்ன செய்யக்கூடும் அவர்களுக்குத் கப்பல் தலைவன் தான் கதி. அவனே தன் சொந்தச் செலவில் ஒரு விருந்து வைப்பான் அந்த விருந்துக்கு எல்லோரும் வரலாம். அங்கே அந்தப் பெண்கள் முக்கிய பாத்திரங்களாக விளங்குவார்கள். பிடித்தவர்கள் பொருக்கி எடுத்துக் கொள்ளலாம்.

கலியாணத்தை உத்தேசித்து வரும் பெண்களுக்கு வியாபாரச் சரக்கைப் போலத்தான்; சூட்டோடுசூடாக விலையாகி விட வேண்டும். நாள் பட தங்கினுல் கடைப்பட்டு விலை போகாமல் நின்றுவிடும். அடுத்த கப்பல் வந்து புதிய சாக்கு வந்து விட்டால் பழைய சரக்கின் மோகம் குறைந்து விடும்.

அவ்விதம் தங்கிப் போகும் பெண்களும் உண்டு. அவர்கள் என்ன செய்ய முடியும்? நாலைந்து மாதம் பார்ப்பார்கள். பிறகு அவர்களே ஒன்று கூடி தலைக்கு இவ்வளவு என்று பிரிவுபோட்டுச் செலவு செய்து ஒரு விருந்து வைப்பார்கள்.

எப்படியும் இவ்விடம் வந்து குடும்பவாழ்க்கையை அடையாமல் வெறும் கையுடன் ஊர் திரும்பினுர்கள் என்பது கிடையாது என்றே சொல்ல வேண்டும்.

இவ்விதம் செய்து கொள்ளும் விவாகங்கள் அந்த காலத்திலேயே இங்கிலாந்தில்நடந்தவற்றை விட திருப்திகரமாக இருந்தன என்று கூறலாம். தம்பதிகள் வாழ்க்கையில் விருப்பு வெறுப்பு ஏற்பட்டாலும் அது முற்றித் தம்பதிகள் பிரிந்து போனதில்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. இருவரும் வாழ்க்கையின் உயர்வு தாழ்வை முன்னமேயே நன்கு அனுபவித்திருக்கிறுர்கள் என்பதைத் தான் முக்கியமானதாக சொல்ல வேண்டும்.

## முன்னூறு பவுன்

கன்னிப் பெண்களைப் புருஷனைத் தேடி ஐயாயிரம் மைலுக்கப்பால் வரும்படி செய்த தூண்டுகோல் என்ன என்பதை கவனித்தால் அவர்கள் வாழ்க்கையில் முதலில் பட்ட அவதியும் பின்னுல் எதிர்பார்த்த ஸௌகரியங்களும் விளங்கும்.

ஒரு ஆங்கிலேயக் கன்னிப் பெண் கும்பினியாரின் 'ஸிவில் ஸர்விஸ்' என்னும் வகுப்பைச் சேர்ந்த உத்தியோகஸ்தனைக் கல்யாணம் செய்து கொள்வாளாகில் அவள் அவனை மட்டும் மணக்கவில்லை. அவனுடன் குறைந்த பக்ஷம் முன்னூறு பவுனையும் சேர்த்து மணந்து கொள்ளுகிறுள். அதாவது அவளுக்கு வருஷ வாரி முன்னூறு பவுன் சம்பளமாகக் கும்பினியாரிடமிருந்து கிடைக்கிறது. ஒரு குறிப்பிட்ட கால அளவு அவன் உத்தியோகம் வகித்து விட்டால், வேலையை விட்டு நீங்கிய பிறகும் அந்தத் தொகை நிச்சயமாகக் கிடைக்கும். அவன் இறந்து விட்டாலும் அவன் மனைவிக்கு அந்தப் பணம் கிடைத்து வரும்.

அதனுல் அவ்விதம் இங்கே வந்து மணம் செய்து கொள்பவர்களில் சிலர் வயது சென்றவனைப் பார்த்துத் தேர்ந்து எடுப்பதும் உண்டு. இளம் வயதுடையவன் கிடைத்தும், அவனுடன் வாழ்வது கஷ்டமாக இருக்குமானுல் 'அவன் எப்பொழுது இறந்து போவான், தான் எப்பொழுது ஊர் திரும்பலாம்' என்று ஏங்கிக் கடவுளைப் பிரார்த்திப்பவர்களும் உண்டு. எப்படியும் வருஷவாரி முன்னூறு பவுன் நிச்சயம் கிடைக்கும். அதைக் கொண்டு ஊர் போய்ச் சேர்ந்து ஸௌக்கியமாக இருக்கலாம் என்ற எண்ணம் போலும்!

## புனருத்தாரணம்

(13-ம் பக்கத் தொடர்ச்சி)

வைத்தோம். நிலைமையில் மிகுந்த அபிவிருத்தி ஏற்பட்டது; இப்பொழுதுகிராமத்தில் 10 பேர் ஸிகரட் பிடிக்க ஆரம்பித்தனர்.

இனி விளையாட்டுகளின் மூலம் கிராமத்தார்களின் மனதைப் பண்படுத்தலாம் என்று எங்களுக்குத் தோன்றியது. இதைத்தான் கடைசி முறையாகக் கைபிடித்தோம். உடனே பக்கத்து வயற் காட்டை கிரிக்கெட் மைதானமாகமாற்றினேம். நாலாபக்கங்களிலும் கிராமத்தார்கள் உட்கார்ந்து கொண்டனர். நான் 'பௌல்' செய்தேன். நண்பன் 'பாட்' செய்தான். அவர்கள் எங்கள் விளையாட்டை இன்று கவனித்தால் நாளை அவர்களையே விளையாடச் செய்யலாம். விளையாடினுல் "ஸ்போர்டிங் ஸ்பிரிட்" உண்டாகும். பின் சீர்திருத்துவது மிகவும் எளிது என்பது எங்கள் அபிப்பிராயம். எனது நண்பன் என்னை அவுட் செய்யமுடியவில்லை. சாமர்த்தியமாக விக்கெட்டைக் காப்பாற்றிக் கொண்டான். இப்படி ஆடிக்கொண்டிருக்கும் பொழுது முனியன் "நான் கொஞ்சம் பந்து எறியறேனுங்க' எனவே நான் அவன் கையில் பந்தைக் கொடுத்தேன். பந்தை முனியன் எறிந்தான். அதே சமயத்தில் எனது நண்பன் 'அப்பாடா' என்று தரையில் விழுந்தான் பந்து பலமாக அடித்து விட்டது. நான் ஆத்திரப் பட்டுக் கொண்டிருக்கும் பொழுது முனியன் 'சாமி! நானு நாழியா நீங்க அவரை அடிக்கப் பாக்கறீங்க, உங்களாலே அடிக்கமுடியலே, ஆனுல் எங்கிட்ட அவர் பாச்சா பலிச்சுதா, நான் கொடுத்தேன் பார்த்திங்களா" என்று சொல்லிக் கொக்கரித்தான். அப்படியே முருகனின் கழுத்தை முறித்து விடலாமா என்று தோன்றியது. ஆனுல் ஹைகோர்ட் ஜட்ஜ், தூக்கு மேடை இவைகள் எல்லாம் என் மனக்கண் முன் வரவே அந்த அபிப்ராயத்தை மாற்றி விட்டேன். வெகு ச்ரமத்துடன் எனது நண்பனை வீட்டிற்கு அழைத்துச் சென்றேன். கொஞ்சம் கொஞ்சமாக பிரஞ்ஞை வரவே அவனிடம் வெகுவாக மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். அன்றிரவே கிராமச் சீர்திருத்தத்திற்கு மூட்டை கட்டிவிட்டு, நாங்களும் மூட்டை கட்டிக்கொண்டு ஊருக்குக் கிளம்பினேம். புனருத்தாரண வேலையை வாய்ப்பேச்சு வீரர்களுக்கே விட்டுவிட்டோம்.

பள்ளிக்கூடம் திறந்தது. அன்று ஸாயங்காலம் அதே 'கனம் பொருந்தியவர்' கிராமப் புனருத்தாரணத்தைப்பற்றிப் பேசியபொழுது நாங்கள் எங்களுடைய ஆத்திரத்தை வெகு கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டோம்.

அன்று எங்கள் ஹெட்மாஸ்டர் சிரித்ததின் அர்த்தம் இன்றுதான் நன்றாக விளங்கியது.

## காதலின் மோதல்

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

நடக்கமுடியாதிருக்கிறது. ஈதென்ன ஆச்சரியம். இதற்கு என்ன காரணம்? இந்த தீனத்தொனி காளி கோவிலிருக்குமிடத்திலிருந்து கிளம்பியதாகத் தெரிகின்றது. இத்தகைய பல இன்னல்களுக்கும் இருப்பிடமன்ரே அப்பிரதேசம். இருக்கட்டும். போய்ப் பார்க்கின்றேன் (செல்கின்ருன்)

### மூன்ரும் காக்ஷி

(காளி பூஜையில் ஈடுபடும் கபாலகுண்டலையும், அகோரகண்டனும், பலியிடுவதற்குறிய வேஷத்தோடு கூடிய மாலதியும் வருகின்றனர்)

மாலதி:—ஹா! அன்பில்லாத அப்பா! நீர் கொற்றவனுள்ளத்தைக் குளிரச்செய்ய உபகாரமாக எண்ணியிருந்த வஸ்து இதோ விபத்தில் விழுந்து அழிகின்றது. ஹா! தாயே, பாழும் தெய்வத்தின் பரிஹாரமில்லாச்செய்கையால் உனது இருதயம் தாக்கப்பட்டுவிட்டது. ஹா! மாலதியையே உயிராகக் கருதி, அவளுக்கு க்ஷேமத்தைத் தேடுவதையே தனது இனிய காரியமாக எண்ணி நடந்து வந்த பகவதி காமந்தகி! நீர் என்னிடம் வைத்த அன்புக்குப் பிரதிப்பிரயோஜனம் உமக்குத் துன்பம்தான். ஹா! என் ஆருயிர்த் தோழி லவங்கிகே! இனி நாம் ஒருவரை ஒருவர் காண்பது கனவில்தான்.

மாதவன்:—ஐயோ! இப்பொழுது ஐயம் தீர்ந்தது. அந்தோ! நான் ஓடிச் சென்றும் உயிருடன் மாலதியைக் கண்டு ஆறுதல் அளிப்பேனு? (மிகவும் விரைந்து செல்கின்ருன்.)

காபாலிகர்கள் (குருவும் சிஷ்யையும்):—தேவி சாமுண்டி! பகவதி! உனக்கு நமஸ்காரம் மஹிஷாஸுரனை மாய்க்கையில் நீ காட்டிய வீரவிளையாட்டை வணங்குகின்றேன். பகவதி! உனதுகை நகம் பட்டுக்கிழிந்த சந்திரபிம்பத்திலிருந்து அமிருதம் ஒழுக அது பட்டு உன் மார்பிலுள்ள மாலையில் கோத்த மண்டையோடுகள் மறுபடியும் உயிர்த்து உன்னை ஊத்துத்துதிசெய்யுமாறுள்ள உன் அத்புத தாண்டவம், எங்களுக்குக் கஷ்டம் நீங்கவும் களிப்பு ஓங்கவும் கருணைபுரியுமாக (இவ்வாறு பற்பல பாசுரங்களிட்டுப் போற்றி ஆநந்தக் கூத்தாட்டம் ஆடுகின்றனர்.)

மாதவன்:—(ஓடிச் சென்று பார்த்து) ஹா! ஐயோ! கஷ்டம்! மாலதி, செம்பஞ்சுக் குழம்பு பூசிச் சிவப்பித்த பூமாலையையும் வஸ்திரத்தையும் அணிந்தவளாய் பாபகாரியம் செய்யத் துணிந்த பாஷண்டர்களான இந்த இரு சண்டாளர்களுடைய கையில் அகப்பட்டு, இரண்டு ஓநாய்களுடைய நடுவில் சிக்கிய மான் பேடைபோல நடுநடுங்கி இதோ யமனுடைய வாயில் விழுந்தருவாயிலிருக்கின்ருளே! ஹா! ஐயகோ! என்ன கஷ்டம்! என்ன இவ்வாறு கருணையற்ற காரியம் செய்யத் தெய்வத்தின் தேற்றம்.

கபால குண்டலை:—அம்மா நீ இப்பொழுது உன் மனத்திற்கினியானை நினைத்துக்கொள். கல்நெஞ்சனுன காலன் உன்னைத் துரிதப்படுத்துகிருன்.

மாலதி:—ஹா! தேவா! மாதவா! நான் பரலோகம் எகினுலும் என்னை நீர் நினைப்பீராக! நண்பரால் நினைக்கப்படுபவருக்கு ஒருகாலும் அழிவு கிடையாது.

கபால குண்டலை:—ஐயோ மாதவனிடம் மனம் பற்றுடையவள் இவள்.

அகோரகண்டன்:—(கொடுவாளை எடுத்து ஓங்கிக் கொண்டு) பகவதீ! சாமுண்டி! நான் மந்திரஸாதனை செய்யத் தொடங்குகையில் வேண்டிக் கொண்டபடி இப்பொழுது செய்யும் பூஜோபஹாரத்தை (காணிக்கையை) பெற்றுக் கொள்ள வேண்டும்.

மாதவன்:—(திடீரென்று சென்று வாளைப் புறங்கையால் தள்ளி விட்டு) அடே! காபாலிகப்பயலே! துராத்மாவே! எடு ஓட்டம்! நீ தொலைந்தாய்.

மாலதி:—(பெட்டெனக் கண்டு) மஹாநுபாவனே! என்னைக் காப்பாற்றுக. (மாதவனைக் கட்டிக்கொள்கிறாள்)

மாதவன்:—எ பாக்கியவதி! பயம் வேண்டாம். மரணம் நெருங்கிய தருணத்திலும் நீ சிறிதுகூட அச்சமும், கவலையும் கொள்ளாமல் எவனிடம் உனக்குள்ள ஆழ்ந்த காதலைப் புலம்புகையிலும் புலப்படுத்தினாயோ, அந்த உயிர்த்தோழன் தான் உன் முன்பில் நிற்கின்றான். எ கட்டழகி! நடுக்கத்தைவிடு. இந்த மாபாபியும், உக்கிரமான தனது பாபச்செயலின் பயனை தன் எண்ணத்திற்கு மாறாகவே அநுபவிக்கப் போகின்றான்.

அகோரகண்டன்:—ஆ! இந்தப் பாபி யார்? நமக்கு இடையூறாகவன்றோ இவன் தோன்றினான்.

கபாலகுண்டலை:— பகவானே! இவன் காமந்தகியின் நண்பனுடைய பிள்ளை மாதவன், மாலதியின் காதலுக்குப் பாத்திரமானவன். மஹாமாம்ஸவிக்ரயம் செய்ய இங்கு வந்தவன்.

மாதவன்:— (கண்ணீர் பெருக) ஸ்ரீமதி! ஈதென்னகூது?

மாலதி:— (நெடுநேரம் கழித்து மன ஆறுதலை அடைந்து) பாக்கியவானே! எனக்கு ஒன்றுமே தெரியாது. மாளிகை மீது படுத்துறங்கினேன. இங்கு விழித்துக்கொண்டேன். இவ்வளவுதான் தெரியும். தாங்கள் இங்கு வர ஹேது என்ன?

மாதவன்:—(வெட்கத்துடன்) என் ஜன்மம் ஸபலமாகும்படி நான் உனது அழகிய கையால் அங்கீகரிக்கப்படுவேனா என்ற பேராவல் தூண்ட, அதற்காக நரமாம்ஸம் விற்கச் சுடுகாடு நாடி வந்தேன். வந்தபின், உனது அழுகைக் குரலைக் கேட்டு இங்கு ஓடிவந்தேன்.

மாலதி:—ஐயோ! இவர் எனக்காகத் தற்காப்பைக் கவனியாமல் இப்படித் திரிகின்றாரே!

மாதவன்:—என்ன ஆச்சரியம். காகதாளீயமாக எதிர்பாராது நேர்ந்த ஸம்பவம் இது. ராகுவின் வாயிலிருந்து சந்திரக் கலையை மீட்டினாற்போல, தெய்வச் செயலாய், இந்தத் திருடனுடைய கத்தி முனையிலிருந்து [காந்த]வியை மீட்டிய என் மனம், அச்சத்தால் அவிந்து கருணையால் கரைந்து வியப்பினால் வெறித்துக் குரோதத்தால் கொதித்து மகிழ்ச்சியால் மலர்ந்து அதிசயமானதொரு நிலையில் நிற்கின்றது.

அகோர:—அடே! பிராம்மணப் பயலே! நீ, புலி வாயில் விழுந்த பேடையைக் காக்க வந்த ஆண் மானைப்போலிருக்கின்றாய். நானோ, பிராணிவதை செய்து பலி கொடுப்பதில் கொடி நாட்டியவன். முதலில், உனது தோளையும் சிரத்தையும் அறுத்து ரத்தம் பெருகியோட உன்னையே அன்னையான காளி தேவிக்குக் காணிக்கையாகக் கொடுத்து விடுகிறேன்.

மாதவன்:—அடே! பாஷண்ட சண்டாளா! நீ என்ன செய்யத் துணிந்தாயடா. நீ செய்யத் தொடங்கிய தீத்தொழில் பூர்த்தியாயிருந்தால், ஸம்ஸாரமே ஸாரமற்றுப் போம்; மூவுலகும் சிறந்த ரத்தினத்தைப் பறிகொடுத்திருக்கும்; ஈரேழு பதினாங்கு லோகமும் ஒளியிழந்து நிற்கும்? உறவினர்க்கெல்லாம் சாவே சரணமாகும். மாரனுடையசெருக்கு மாய்ந்து போகும் மனிதர் கண்படைத்தது பயனற்றதாகும்; அதிகமேன்? அங்கண் மாஞாலமே அழிந்த காடாகும். மேலும், அடேடே மாபாபீ! அன்பார்ந்த தோழிமார், பரிஹாச வேளையில், வேடிக்கையாக எறியும் வாகப் பூக்கள் பட்டாலும் வாட்டமடையும் மெல்லிய இம்மாலதியின் மேனியில் கத்தியை வீசக் கருதிய உன் தலையில் எனது கை, யமதண்டம்போல இதோ விழுகிறது பார்.

அகோர:—ஆ! அடியடா பயலே; அடியடா, இதோ நீ இறக்கப் போகின்றாய்.

மாலதி:—நாதா! ஸாஹஸம் வேண்டாம். தயை செய்யுங்கள். இந்தக் கெட்ட மனிதன் வெகு க்ரூரன், என்னைக் காப்பாற்றுங்கள். இந்த ஸங்கடத்தை விட்டுத் திரும்புங்கள்.

கபாலகுண்டலை:-பகவானே! தவறுதலுகளுக்கு இடம் கொடாமல், இவனைக் கொல்லுங்கள்.

மாதவன்:—<br>
அகோர:— } (மாலதியைக் குறித்தும், கபாலகுண்டலையைக் குறித்தும்) எ பயந்தவளே! தைரியமாயிரு. இந்தப் பாபி இதோ தொலைந்தான். மதம் பிடித்த யானையின் மத்தகத்தைப் பிளக்கும் நகவலிமை வாய்ந்த சிங்கத்துக்கு எங்காவது மானை மாய்ப்பதில் தவறு நேர்ந்ததாக கண்டதுண்டா?

(திரைக்குள்:—ஓ மாலதியைத் தேடும் சிப்பாய்களே! தங்குதடையில்லாது எதிலும் பாவும் ஸூக்ஷ்ம புத்தியையுடைய பகவதி காமந்தகி, பூரிவஸுக்கு ஆறுதல் கூறிவிட்டு, இவ்வாறு கட்டளையிடுகிறார்—இந்தப் "பொல்லாச் சூழ்ச்சியை அகோர கண்டனைத் தவிர்த்து வேறு யாரும் செய்யத்துணியார். காளியம்மனுக்குப் பலியிடவே இவன் இப்படிச் செய்திருக்கிறான். ஆகையால் எல்லாரும் காளி கோவிலைச் சூழ்ந்து கொள்ளுங்கள்."

கபாலகுண்டலை:—பகவானே! நாம் சுற்றிலும் சூழப்பட்டோம்.

அகோரன்:—அங்ஙனமாயின் நம் பௌருஷத்தை விசேஷமாகக் காட்ட வேண்டிய ஸமயம் இது.

மாலதி:—ஐயோ! பிதாவே! ஐயோ பகவதீ!

மாதவன்:—ஆம். மாலதியை உற்றாரிடம் ஒப்படைத்துவிட்டு இவர்களுடைய முன்பிலேயே இவனைக் கொல்லுகின்றேன். (மாலதியை வேறிடத்துக்கு அனுப்பிவிட்டு வருகிறான்.)

மாதவன், அகோரகண்டன்:—(ஒருவருக்கொருவர்) அடே! அடே! பாபீ! அகோ! கடினங்களான எலும்புகளில் தட்டும் போது "கணீர்" என்ற சப்தம் பிறக்க நரம்புகளில் படும் போது வேகம் சிறிது தடைபட்டு முடிவில் அவற்றை அறுக்க, தசை நிறைந்த விடங்களில் சேற்றில் அழுந்துவதைப் போலத் தடையின்றி அழுந்த, எனது வாளை உனது உடலில் பாய்ச்சிக் கண்டதுண்டமாக வெட்டி எறிந்து வீழ்த்துகின்றேன்.

(எல்லாரும் செல்கின்றனர்.)

# மோகனாங்கி

அல்லது

## திவான் திருமலை ராயன் ஸாகஸம்

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டு போய் அவரிடம் ஒப்படைத்து வைக்கிறேன். அவரிடம் இருந்தால் உனக்கு எவ்வித அபாயமும் நேராது.

மோகனாங்கி:—(மிகுந்த மகிழ்ச்சியோடு) ஓகோ! அப்படியா! அவருக்கும் எனக்கும் பழக்கம் உண்டே! அங்கேயே போய் விடலாம்.

கலியாணராமன்:—(வியப்போடு) அவரை நீ எப்போது பார்த்தாய்?

மோகனாங்கி:—போன வருஷம் பார்த்தேன்.

கலியாணராமன்:— அப்படியானால், போன வருஷம் நீ இந்த ஊருக்கு வந்தாயா?

மோகனாங்கி:—நான் வரவில்லை. அவர் மர்மக்கோட்டைக்கு வந்திருந்தார்.

கலியாணராமன்:— (திடுக்கிட்டு மிகுந்த ஆச்சரியத்தோடு) என்ன ஆச்சரியம்! மர்மக் கோட்டைக்கு இவர் எதற்காக வருகிறார்? இவர் வந்தது உனக்கு எப்படித் தெரிந்தது?

மோகனாங்கி:—(வசீகரமான புன்னகையோடு) பீமசேனராவும் அவருடைய அக்காளும் தங்களிடம் ஒரு விஷயத்தை வெளியிடக் கூடாதென்று மறைத்து வைத்தார்கள். அதை நான் கூடிய விரைவில் தங்களிடம் வெளியிடவேண்டுமென்று நினைத்திருந்தேன்.

கலியாணராமன்:— (திடுக்கிட்டு, சகிக்க முடியாத ஆச்சரியத்தோடு) அவர்கள் என்னிடம் பொய்கூடச் சொன்னார்களா! அது என்ன விஷயம்?

மோகனாங்கி:—அவர்கள் தங்களிடம் மாத்திரம் பொய் சொல்லவில்லை—என்னிடத்திலும், இன்னம் எல்லாரிடத்திலும் பொய்யான தகவலைச் சொன்னார்கள். ஆனால் அது அவர்களுடைய குற்றமல்ல.

கலியாணராமன்:—உன்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும் என்ன பொய் சொன்னார்கள்?

மோகனாங்கி:—என் தாயையும், என்னையும் பதினேழு வருஷங்களுக்கு முன் ஒரு மரத்தடியில் கண்டு அழைத்துக் கொண்டு வந்ததாகவும், நாங்கள் யார் என்பது தெரியாதென்றும், அவர்கள் சொன்னது பொய். என் தாய் கர்ப்பிணியாயிருந்த காலத்தில், அவளை என் தகப்பனார் பீமசேனராவுடைய பாதுகாப்பில் மர்மக் கோட்டைக்குள் விட்டு வைத்திருந்தாராம். அங்கேதான் நான் பிறந்தேனாம். தஞ்சைக் அரண்மனையிலிருந்து மர்மக் கோட்டைப்போக, பூமியின் கீழ் ஒரு சுரங்க வழி இருக்கிறதாம். அது இருக்கிறது, முக்கியமான சிலருக்கு மாத்திரம் தெரியுமாம்.

கலியாணராமன்:—(அதீதமான திகைப்போடும் ஆச்சரியத்தோடும்) உண்மையைச் சொன்னால், நீங்கள் யாருடைய சொந்தக்காரர்கள் என்பது தெரிந்துவிடுமென்று அந்த மாதிரி பொய் சொன்னார்கள் போலிருக்கிறது. உங்களுக்கு நன்மையைக் கருதியே அவர்கள் அப்படிச் சொல்லி இருக்க வேண்டுமென்பது நன்றாய்த் தெரிகிறது. ஆகையால் இதைப் பற்றி எனக்கு அவர்கள் மேல் கொஞ்சமும் கோபமில்லை. அப்படியானால், நீ எதுவரையில் அந்தக்கோட்டைக்குள் இருந்தாய்?

மோகனாங்கி:—என் தாய் ஆற்றில் விழுந்து இறந்து போனதற்கு சில தினங்களுக்குப் பிறகு, என்னை அவர்கள் வஸந்த மாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோனார்கள். அவர்கள் அதுவரையில் அங்குமிங்குமாய் இருந்தார்கள்.

கலியாணராமன்:— (முன்னிலும் அதிகரித்த வியப்போடு) உன் தாய் மர்மக் கோட்டையிலிருந்து ஆற்றில் விழுந்து இறந்துபோனாளா! எப்போது?

மோகனாங்கி:—அது தங்களுக்குத் தெரிந்தது தானே! தாங்கள் தானே என் தாயை வெள்ளத்திலிருந்து எடுத்துக் கரை சேர்த்தீர்கள்?--என்றாள்.

அவளுடைய சொல் கலியாணராமனுடைய உடம்பைத் தூக்கிப்போட்டது. அவன் பிரமித்துப்போய், "ஆஹா ஹா! அவர்களா உன் தாய்? ஐயோ! எவ்வளவு அழகு! எவ்வளவு அற்புதமான தேஜஸ்! அப்படியானால், அன்று அந்தக்கோட்டைக்குள்ளிருந்து என்னைப் பார்த்து விட்டு மறைந்தவள் நீயே தான் போலிருக்கிறது!

மோகனாங்கி:-(சந்தோஷமுக மலர்ச்சியோடு) வேறே யாராய் இருக்க முடியும்! நானே தான்! அவ்வளவு அரிய தீரத்தோடு வெள்ளத்தில் விழுந்து என் தாயை எடுத்து வந்த உங்களுக்கு ஒரு நன்றியறிதல் வார்த்தைகூடச் சொல்ல மாட்டாத நிலைமையில் நாங்கள் இருக்கிறோமே என்று எண்ணி வருந்தித் தங்களைப் பார்த்தேன். அந்த ஒரே பார்வையில் தாங்கள் என்னுயிரையும் ஆசாபாசங்களையும் அப்படியே அபகரித்துக் கொண்டு போய் விட்டீர்கள்!

கலியாண ராமன்:—(திகைப்போடு) ஓகோகோ! அப்போதே உனக்கு என் மேல் பிரேமை உண்டாய் விட்டது போலிருக்கிறதே!

மோகனாங்கி:—தங்களுக்கும் எனக்கும் பகவான் முடிபோட்டிருக்கையில், முதல் பார்வையிலேயே என் பிரேமை உண்டாகாது! அது முதல் நானும் என் தாயைப் போல் பைத்தியங் கொண்டவளாய் மாறி விட்டேன். அதைக் கண்டு அவர்கள் பயந்து என்னை வற்புறுத்திக் கேட்டனர். கிழவியிடம் அதன் காரணத்தை நான் வெளியிட்டேன். தாங்கள் இன்னார் என்பது பீமசேனராவுக்கு நன்றாய்த் தெரியும். தாங்கள் தினம் தினம் குதிரை சவாரி செய்து கொண்டு கொள்ளிடத்தின் கரையோடு அதற்கு முன் போனதை நாங்கள் பார்த்திருக்கிறோம். ஆனால் நான் கிட்ட நெருங்கி தங்கள் திருமேனிக் கோலத்தை தரிசித்ததில்லை. என் தாய் ஆற்றில் விழுந்த அன்றைய தினமே தங்களை சமீபத்தில் பார்த்தேன். அந்த தினத்திற்குப் பிறகு சுமார், இருபது தினங்கள் வரையில் தாங்கள் கோட்டைக்கு எதிரில் வந்திருந்து மிக ஏக்கத்தோடு, கோட்டையையே பார்த்திருந்ததை பீமசேனராவ் கவனித்துதாங்களும் அடியாளை மறுபடி பார்க்க ஆசை கொண்டிருப்பதாக யூகித்துக் கொண்டு, தங்களை வஸந்த மாளிகைக்கு தந்திரமாக அழைத்து வரும்படி கிழவியை அனுப்பினார். மற்ற சங்கதிகள் தங்களுக்கே தெரியும்.

கலியாணராமன்:—ஆஹா ஹா! அந்தக் கிழவி எவ்வளவு சாமர்த்தியமாய் நடித்து, ஒரே நிமிஷத்தில் என்னைத் தன் வசப்படுத்தி அழைத்துக்கொண்டு வந்தாள்! இது நம்பமுடியாத கட்டுக்கதைபோல் அல்லவா இருக்கிறது!

மோகனாங்கி:—தங்கள் அடியாளான எனக்கும் நிரந்தரமாய்ப் பைத்தியம் பிடிக்காதிருக்கும் பொருட்டு; என்னைக் காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணத்தினாலேயே கிழவி அப்படிச் செய்தார்கள். இதையெல்லாம் தாங்கள் கெடுதலாய் எண்ணி என்மேல் அருவருப்புக் கொள்ளக்கூடாது. ஆயிரம் பொய் சொல்லியேனும் ஒரு குடும்ப விளக்கை ஏற்றி வைக்கலாமென்று பெரியோர் சொல்லுவதுண்டல்லவா!—என்று மிகப் பணிவாயும் உருக்கமாகவும் கூறினாள். கலியாணராமன் அதீதமான பிரேமையோடு அவளைத் தழுவி இறுகப் பிடித்துக்கொண்டு, "கண்மணீ! அந்த இருபது தினங்களாய் உன்னைப் பார்க்காமல் நான் தவித்தது உனக்கு எப்படித் தெரியப் போகிறது? நான் சாப்பிடவுமில்லை; தூங்கவுமில்லை. இன்னம் சில தினங்கள் நான் உன்னைப் பார்க்காமல் இருந்திருந்தால், நான் இறந்திருப்பது நிச்சயம். பீமசேனராவும், கிழவியுமே எனக்கு உயிர் கொடுத்த பிராணரக்ஷகர்கள்! அவர்கள் இருந்த நிலைமையில் அவர்கள் அப்படிச் செய்

தது மிகவும் பொருத்தமான காரியமே! (சிறிது நிதானித்து) அப்படியானால், உன் தாய் அன்றே இருந்து விட்டார்களா!

மோகனாங்கி:— (விசனத்தோடு) ஆம்!

கலியாணராமன்:—ஐயோ பாவம்! இப்போதல்லவா மர்மக் கோட்டைக்குள் உண்டான அலறல் ஓசை, மேல்பக்கத்தில் தலைகள் தெரிந்தது ஆகியவற்றின் காரணம் விளங்குகிறது! இதுபோலத்தான் ஜனங்கள் உண்மையை உள்ளபடி அறியமாட்டாமல் தப்பான மூட நம்பிக்கைகளை வைத்துக்கொண்டு தவிக்கிறார்கள். (சற்று நிதானித்து) நிரம்ப சந்தோஷம். நடப்பதெல்லாம் நன்மைக்கே என்பார்கள். அதுபோல், உன் தாய் ஆற்றில் விழுந்தது உன்னையும் என்னையும் சேர்த்து வைக்க, பகவன்செய்த சூழ்ச்சி என்றே நான் எண்ணுகிறேன்.

மோகனாங்கி:—(உற்சாகத்தோடு) ஆம். அப்படித்தானிருக்கவேண்டும்.

கலியாணராமன்:—அதிருக்கட்டும்! இந்த புஜங்கராவ் மர்மக் கோட்டைக்குப் போன வருஷம் வந்திருந்தாரா?

மோகனாங்கி:—ஆம்; அவர் அவருடைய மனைவியுடன் ஏதோ ராஜாங்க விஷயமாய்த் தஞ்சைக்கு வந்தவர் நெருங்கிய உறவினர்களான பீமசேனராவ் முதலியோரைப் பார்க்க மர்மக் கோட்டைக்கு வந்திருந்தார்கள். அப்போது எனக்கும் அவர்களுக்கும் பழக்கம் உண்டாயிற்று. அவர்களுக்கு என்னிடம் நிரம்பவும் பிரியம் உண்டாய் விட்டது. இப்போது நான் போனால் அவர்கள் என்னை மிகவும் பிரியமாயும் ஜாக்கிரதையாயும் வைத்துக்கொள்ளுவார்கள்.

கலியாணராமன்:—நிரம்ப சந்தோஷம். காலையில் அவர் அனுப்பும் வண்டியில் நான் உன்னையும் அழைத்துக் கொண்டு போகிறேன். அதற்குள் ஒரு வேளை திவான் உன்னைத் தேடிக்கொண்டு இங்கே வந்தாலும் வருவார். எங்கள் வேலைக்காரியான கமலாவும் நீயும் இந்த அறைக்குள் இருங்கள். நானும் என் தமயனும் வெளியில் இருந்து பாராக் கொடுக்கிறோம்—என்றான்.

மோகனாங்கி அதற்கு இணங்கினாள். மேலும் சிறிது நேரம் காதலர் இருவரும் சந்தோஷமாக சம்பாஷித்திருந்தனர். உடனே கலியாணராமன் வெளியில் சென்று கமலாவை மோகனாங்கிக்குத் துணையாக உள்ளே அனுப்பிவிட்டு, நரசிங்கனிடம் அவசியமான தகவல்களைத் தெரிவித்து விட்டு அவனுடன் வெளியில் படுத்திருந்தான். திவான் மோகனாங்கியைத் தேடிக்கொண்டு வந்தால், எப்படியாகிலும் தாங்கள் அவளைப் பாதுகாத்தே தீரவேண்டுமென்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டு, தூங்காமல் நிரம்பவும் எச்சரிக்கையாக இருந்தனர்.

ஆனால் திவான் திருமலைராயருடைய ஆழ்ந்த யுக்திக்கு முன் அவர்கள் எம்மாத்திரம்! மோகனாங்கியைத் தேடிக் கொண்டு பல திசைகளிலும் சென்றவர்கள் திரும்பி வந்து, அவள் அகப்படவில்லையென்று சொல்லச் சொல்ல, திவானுடைய மனதில் ஓர் எண்ணம் உண்டாயிற்று. மோகனாங்கி போகக்கூடிய இடம் சந்திரகிரியில் வேறு எதுவுமில்லையாகையால் அவள் கலியாணராமனிடத்திற்கே போயிருக்க வேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டு, உடனேதாம் மாத்திரம் தனிமையில் புறப்பட்டு சத்திரத்தையடைந்து, போலி சுதர்சனராயரான ஹயக்கிரீவன் படுத்திருந்த இடத்தை அடைந்து அவனை மெல்ல எழுப்பி அவனிடம் ரகசியமாய்ச் சில செய்திகளைக் கூறினார்.

ஹயக்கிரீவன், "கலியாணராமனுடன் ஒரே ஒரு பெண்தான் வந்தாள். அவளை ஆள்கள் பார்த்திருக்கிறார்கள். இன்னம் யாராவது புதிதாய் வந்திருந்தால், அது அவர்களுக்குத் தெரியும். இந்த நிமிஷம் முதல் நானும் ஆள்களும் அவர்கள் இருக்கும் இடத்தைச் சுற்றிலும், அவர்கள் சந்தேகப்படாதபடி இருந்து கவனிக்கிறோம். புதிதாய் யாராவது ஸ்திரீ வந்திருந்தால் உடனே திவான் ஸர்க்காருக்கு அதை அறிவிக்கிறேன்" என்றான்.

திவான்:—ஒருவேளை அவன் எங்கேயாவது போனால் அவர்கள் பின்னாகவே போய் எங்கே போகிறான் என்பதைத் தெரிந்துகொண்டு எனக்கு உடனுக்குடன் செய்தியனுப்பு—என்றார்.

ஹயக்கிரீவன் அப்படியே செய்வதாக ஒப்புக்கொள்ள, திவான் உடனே புறப்பட்டுப் போய்விட்டார்.

திவான் ஆள்களுடன் வந்து, அப்போதே, கலியாணராமனுடைய விடுதியை ஆராய்ந்து பார்த்திருக்கலாமானாலும் அம்மாதிரி பகிரங்கமாய் அவர் மோகனாங்கிக்கு எதிரியாய்த் தம்மைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை. அப்படிச் செய்தால், அந்தச் செய்தி ஊரில் பரவி பலவிதமான புரளிகளுக்கு இடங் கொடுக்குமாதலால், அப்படிச் செய்வது உசிதமல்லவென்று அவர் கருதினார். கலியாணராமனுடன் அவள் இருந்தால் அவள் எப்படியும் தமது வலையில் சுலபத்தில் அகப்பட்டுக்கொள்வாள் என்ற நம்பிக்கை அவருக்குப் பூர்த்தியாயிருந்தது. கலியாணராமன் மகாராஜாவைக் கொல்ல முயற்சித்ததான சதியாலோசனைக் குற்றத்திற்காக, எப்படியும் மரண தண்டனையோ, நெடுங்கால சிறை வாச தண்டனையோ விதிக்கப்பட வேண்டிய நிலைமையில் இருந்தானாதலால், மோகனாங்கியைத் தாம் எப்படியும் பிடித்துக் கொள்ளலாமென்று திவான் உறுதியாக நம்பினாராதலால், இப்போது அதிக தடபுடல் செய்ய அவர் விரும்பவில்லை. திவான் போகுமுன் ஹயக்ரீவனை நோக்கி, "நீயும் ஆள்களும் அவர்களுடைய விடுதியைச் சுற்றிலும் இருந்து அவர்களுக்குத் தெரியாமல் கவனித்துக்கொண்டிருங்கள். பொழுது விடிந்தவுடன் அவனை புஜங்கராவிடம் அழைத்துப்போக வண்டிவரும். உடனே அவன் புறப்பட்டுப் போய்விடுவான். அப்போது வேலைக்காரியை அவர்களுடைய விடுதி பெருக்குவதற்காக அனுப்பி இரண்டு பெண்கள் உள்ளே இருக்கிறார்களா என்பதைத் தெரிந்து கொண்டு, எனக்கு உடனே செய்திசொல்லி அனுப்பு" என்று கூறிவிட்டுச் சென்றார்.

அவர் கூறியதுபோலவே ஹயக்கிரீவனும், ஆள்களும் நாலாபக்கங்களிலும் இருந்து கவனித்துக்கொண்டிருந்தனர். ஆனால் கலியாணராமன் முதலியோர் மோகனாங்கி அங்கே இருக்கிறாளென்பதைப் பற்றி எவரும் சம்சயப்படவில்லையென்று நினைத்துக் கொண்டிருந்தனர். ஆயினும் கலியாணராமனுடைய மனதில் கவலையும் கலக்கமும் குடிகொண்டிருந்தன. தான் மகாராஜாவை வெட்டும் முயற்சியில், அகப்பட்டுக்கொண்டால் தான் தப்புவது முடியாத காரியமாதலால், அப்போது மோகனாங்கியின் கதி என்னாவது என்ற ஓர் எண்ணமே அவனை நரக வேதனைக்குள் படுத்திக் கொண்டிருந்தது.

அந்த நிலைமையில் பொழுது விடிந்தது. கலியாணராமனும் மோகனாங்கியும் புஜங்கராவிடம் போவதற்கு ஆயத்தமாயிருந்தனர். போலி புஜங்கராவால் அனுப்பப்பட்ட வண்டியும் வந்து சேர்ந்தது. மோகனாங்கியை ஒரு துப்பட்டியால் தலை முதல் கால்வரையில் போர்த்தி அழைத்துக் கொண்டு கலியாணராமன் சென்று வண்டியை அடைய, இருவரும் உள்ளே உட்கார்ந்து கொண்டனர். வண்டி உடனே புறப்பட்டு அரண்மனையை நோக்கிச் சென்றது.

அவர்களை கவனித்துக் கொண்டு மறைவில் இருந்த ஹயக்ரீவன் கலியாணராமனுடன் ஒரு ஸ்திரீயும் சென்றதை கவனித்து, அதைப்பற்றி ஆச்சரியமடைந்தான். கலியாணராமன் மாத்திரமே போவானென்று திவான் கூறியதற்கு மாறாக, அவன் ஒரு ஸ்திரீயையும் தன்னுடன் கூட அழைத்துக்கொண்டு சென்றதன் கருத்து அவனுக்கு விளங்கவில்லை. அரண்மனையிலிருந்து தப்பி ஓடிவந்த ஸ்திரீயை அவன் மறுபடி அரண்மனைக்கே அழைத்துக் கொண்டு போவானா என்னும் சம்சயமும் உதித்தது. அவன் கமலாவையோ, மோகனாங்கியையோ பார்த்தவனன்று. கலியாணராமனுடன் கமலா என்ற பெயருடைய ஸ்திரீ வந்திருக்கிறாள் என்று அவன் ஆள்கள் மூலம் தெரிந்து கொண்டிருந்தான். ஆகவே, கமலா தான் கலியாணராமனுடன் செல்லுகிறாளோ என்ற சந்தேகம் ஹயக்கிரீவனுடைய மனதில் உண்டாயிற்று.

ஆகவே, அவன் உடனே வேலைக்காரியை அந்த விடுதிக்கு அனுப்பி, இன்னும் யாராவது ஸ்திரீ உள்ளே இருந்தாளா என்பதை அறிந்து வரச் செய்து, கமலா உள்ளே இருந்ததாக அறிந்தான். எனவே, திவான் தேடிய ஸ்திரீ தான் கலியாணராமனுடன் போனவளாயிருக்க வேண்டும் என்று சந்தேகித்த ஹயக்கிரீவன் உடனே அந்தச் செய்தியை ஓலையில் எழுதி ஓர் ஆளிடம் கொடுத்து அவனை திவானிடம் முடுக்கி விட்டான்.

(தொடரும்)

## நவ நாகரீகம்

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

### தேர்

நான் பங்கஜத்திடம் புடவையை வர்ணித்து முடிப்பதற்குள் கிளப்பிற்கு வந்து விட்டோம். எங்களைக் கண்ட லேடி சுந்திராசாரி:— ‘ஏன் இன்னேரம்?’ என்றாள்.

இதற்கு பதில் கூறாமல், ‘நீங்கள் ஏன் நேற்றுக் கிளப்பிற்கு வரவில்லை?’ என்றேன்.

‘தேருக்குப் போயிருந்தேன். என்ன கூட்டம் போங்கோ?’ என்றாள்.

‘நானும் போயிருந்தேன்; இனிமேல் போவதில்லை என்று தீர்மானித்து விட்டேன்!’ என்றாள் நளினா.

‘ஏன் அப்படி?’ என்றாள் மற்றொரு சிநேகிதி.

‘நேற்று எங்க பக்கத்தாத்துப் பாட்டியும், அவள் பெண் வனஜாவும் தாங்கள் தேர் பார்க்கப் போவதாகவும், என்னையும் கூட வரவேண்டும் என்று கூப்பிட்டார்கள். சரி என்று போனேன். தேர் நிலைக்கு வந்து விட்டது. மேடையில் ஏறித் தேருக்குள் போய் சுவாமி தரிசனம் பண்ணலாம் என்றார்கள். போருமென்றாகி விட்டது!’

‘ஏன்? அங்கேதான் சாரணர்கள் நின்று, எல்லாரையும் படிக்கட்டின் ஒரு பக்கமாக ஏறச் சொல்லி, மற்றொரு பக்கமாக இறக்கிக் கூடிய மட்டில், கூட்டத்தில் சௌகரியம் செய்தார்களே!’ என்றாள் லேடி சுந்தராசாரி.

‘அது சரித்தான்; ஆனால் அவர்கள் படியை இரண்டு பாகமாகத் தடுத்ததற்குப் பதில், மூன்று பாகமாகத் தடுத்து ஸ்திரீகளுக்கு என்று ஒரு இடம் ஒதுக்கி இருக்க வேண்டும்!’ என்றாள் நளினா தேவி.

‘ஆமாம்; நானும் இதில் கஷ்டப்பட்டேன். தேருக்குள் ஒரு சமயத்தில் நாலைந்து பேர்களையே விடுவதால் இறங்கும் படியில் கூட்டமில்லை. ஏறும்படியிலும் மேடையிலும் நான் முந்தி, நீ முந்தி என்று நெருக்கத்தான் செய்கிறார்கள். இங்கு ஸ்திரீகளுக்கு வேறையாக இடம் ஒதுக்கினால் சௌகரியமாகத்தான் இருக்கும்!’ என்றாள் மற்றொருத்தி.

‘வேணும் என்றே சிலர் மேலே விழுகிறார்களோ என்று கூடத் தோன்றுகிறது. ஒருவன் கூட்டத்தில் எங்களை நெருக்கினான். நாங்கள் திரும்பிப் பார்த்தோம். கூட்டத்தில் சொகுசாக இருக்கமுடியுமோ? அப்படி இருக்கப்பட்டவர்கள் தேருக்கும் திருவிழாவுக்கும் வரப்படாது; மரியாதையாக வீட்டிலேயே இருக்கணும் என்று ஒரு பிரசங்கம் வேறு செய்தான். நம்ம ஜனங்களுக்கும் இன்னும் இது விஷயங்களில் பயிற்சி போரவில்லை’! என்றாள் நளினாதேவி.

‘எவனோ சொன்னதை வைத்து உலகை அளக்கமுடியுமா? இருந்தாலும், உலகம் இப்படி இருக்கும்வரையில், கூட்டத்தில் சென்றால் சிரமம் தான்’ என்றாள் லேடி சுந்திராசாரி.

## திரை கடலின் திரவியங்கள்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

முழுவதும் நீர் சுரந்து கொண்டிருக்கும். இவைகளைக் கடலினடியிலிருந்து மனிதர்கள் மூழ்கி எடுத்துச் சுத்தப்படுத்தி வியாபாரத்திற்கு அனுப்புவார்கள்.

நாம் உபயோகிக்கும் கடலிலிருந்து வரும்மற்றொரு வஸ்து கடல் நுரை. இதை பள்ளிக்கூடத்து மாணுக்கர்கள் தங்கள் பலகைகளைச் சுத்தம் செய்ய உபயோகிப்பது வழக்கம். இது கடலின் மேலிருக்கும் நுரை அப்படியே காய்ந்து போனதென்று சொல்வார்கள். ஆனால் அப்படியல்ல. இது கணவாய் மீன் என்று சொல்லப்படும் ஒரு; மீனின் மேல் ஓடு; இதுவும், முத்துக்கள், கடல் பஞ்சு, பவழம் முதலியன போல் கடலில் வாழ்ந்து வந்த ஜீவப்பிராணிகளிடமிருந்தே வருகிறது. விஷயம் தெரியாதவர்களுக்கு; இவைகளுக்கும் ஒரு காலத்தில் உயிரும் உணர்ச்சியும் இருந்திருக்குமா என்ற சந்தேகமும் இருக்கும். தெரிந்த பின் ஆச்சரியத்தையும் கொடுக்கும்!





எழும்பூர் டிரமாடிக் சொஸைட்டியார் சமீபத்தில் 4 நாடகங்கள் சிறப்பாகநடித்தனர். (மேல்) ‘மாத்ருபக்தி’ என்ற நாடகத்தில் ராவணனாகநடித்த டாக்டர் வி. ராமமூர்த்தியும் மண்டோதரியாகநடித்த ஸ்ரீ சந்தானமும். (கீழ்) மிருச்சக்கடியில் சாருதத்தனாக நடித்த ஸ்ரீ. வி. ராமமூர்த்தியும் மைத்திரேயனாக நடித்த ஸ்ரீ என். வி. ஸ்ரீனிவாஸனும்.

# த்யாகராஜ கீர்த்தனம்

[காபிரைட்]

(சங்கீத வித்வான் துறையூர் எம். ராஜகோபால சர்மா)

I

பல்லவி

ஜோ ஜோ ராம! ஆனந்த கன!

அனுபல்லவி

ஜோ ஜோ தசரத பால! ராம!
ஜோ ஜோ பூஜா லோல! ராம!

சரணம்

1. ஜோ ஜோ ரகுகுல திலக! ராம!
ஜோ ஜோ குடில தராலக! ராம!
2. ஜோ ஜோ நிர்குண ரூப! ராம!
ஜோ ஜோ ஸுகுண கலாப! ராம!
3. ஜோ ஜோ ரவி சசி நயன! ராம!
ஜோ ஜோ பணி வர சயன! ராம!
4. ஜோ ஜோ ம்ருது தர பாஷ! ராம
ஜோ ஜோ மஞ்ஜுள வேஷ! ராம!
5. ஜோ ஜோ த்யாக ராஜார்ச்சித!
ஜோ ஜோ பக்த ஸமாஜ! ராம!

II

ராம! —ஹே ராமா!
ஆனந்தகன! —ஆனந்தாம்ருதத்தை வர்ஷிக்கும் மேகம் போன்றவனே
தசரத பால! ராம! —தசரத சக்ரவர்த்தியின் திருக்குமாரனாகிய ஸ்ரீ ராமா!
பூஜா லோல! ராம! —பூமி புத்ரியான ஸீதாதேவியுடன் லீலாலோலனாக இருப்பவனே!
ரகுகுல திலக! —ரகுவம்சத்திற்கே திலகம் போன்றவனே!
குடில்தர அலக! —சுருண்டு படிப்படியாக உள்ள கேசபாரத்தையுடையவனே!
நிர்குண ரூப! —நிர்குணஸ்வரூபனே!
ஸுகுணகலாப! —நற்குணஸ்வரூபனே!
ரவிசசி நயன! —ஸூர்ய சந்த்ரர்களைக் கண்களாக உடையவனே!
பணிவரசயன! —ஆதிசேஷனாகிற சர்பத்தின்மேல் பள்ளிகொண்டவனே!
ம்ருதுதரபாஷ! —அதிக இனிமையாகப் பேசுகிறவனே!
மஞ்ஜுள வேஷ! —மனோக்ஞமான வடிவையுடையவனே!
த்யாகராஜார்ச்சித —த்யாகராஜரால் பூஜிக்கப்பட்டவனே!
பக்தஸமாஜ! —பக்தஜன பரிவாரங்களையுடையவனே!
ராம! —ஸ்ரீ ராமா!
ஜோ ஜோ! —நீ கண் வளர்வாய்!

III

ஸ்வாமிகள் பிரதி தினமும் இரவில் தன் பூஜா மூர்த்தியான ஸ்ரீராமனை ஆனந்தமாக நித்திரை செய்தருளுமாறு இக்கீர்த்தனத்தைப் பாடித் துதித்த பின்னரே தான் படுக்கச் செல்வார். 'ஊய்யால லூகவைய' என்ற கீர்த்தனமும் இது போன்றதே யாகும்.

ஆ...ந்த கன:—யோகிகளுக்கு பகவத் ஸ்வரூப த்யானம் மிகுந்த ஆனந்தத்தைக் கொடுக்கவல்லது என்று குறிப்பிடுகிறார்.

பூஜா லோல:—பூமாதேவியின் மகளாயவதரித்து பகவானை மணந்து விளங்கும் வைபவத்தைக் குறிப்பிடுகிறார்.

குடித ராலக:—பகவானுடைய கேச பாரத்தின் அழகை வர்ணிக்கிறார். : 'அலகலல்ல என்ற கீர்த்தனத்தில் விச்வாமித்ர முனி பகவானுடைய கேச பாரம் அசைந்து விளங்கிய அழகில் ஈடுபட்டதாகக் குறிப்பிட்டுள்ளார்.

ம்ருது தர பாஷ!:—ஸ்வாமிகள் அடிக்கடி பகவானுடைய இனிமை வாய்ந்த பேச்சைப் பற்றி வர்ணிப்பதால், அவருக்கு அத்தகைய ஸந்தர்ப்பம் கிடைத்து அனுபவித்தவராகவே அறியலாகும்.

பக்த ஸமாஜ:—'நாஹம் வஸாமி வைகுண்டே' என்ற ச்லோகத்தில் சொல்லப்படுவது போன்று ப்கவான் பக்தர்கள் கூடியுள்ள இடங்களில் வஸிக்கிறார் என்று ஸ்வாமிகளும் குறிப்பிடுகிறார்.

IV

ராகம் ரீதி கௌளை — ஆதி தாளம்

(22-வது மேள ஜன்யம். ஆ. ஸகரிகமநிநிஸ்.
அவ. ஸநிதமபாமகரிகஸ.)

பல்லவி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பா ; பா மா | கமபம காரீ | ஸா ;; | ; ஸநி | ஸகாரி | காமா |
| ஜோ ஜோ . | ஜோ . . . ரா . | ம | ஆ . | னந் . த | க ன |
| மா நீ நிதமா | மகபம காரீ | ஸா ; | ; ; | ; ; | ; ; |
| ஜோ . ஜோ . . | ஜோ . . . ரா . | ம | | | |

சரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ; பா பா , | ; மநிதமா | காரீ | காமா | மா ; கம | பம |
| ஜோ ஜோ | ரகுகுல | தில | கா . | . ரா . | . . |
| கரி ஸநி காரீ | கா மா பா மா | மகமநி | நிதமா | மகரீ | காமா |
| . . ஜோ . ஜோ . | குடிதல | ரா . . . | . . . | ல . க | ராம |

(மற்ற சரணங்களையும் இதுபோன்றே பாடவும்)

சிறுவர் கதை

★

## ஊசிக்குள் ஊசி பாயுமா?

★

பி. எச். ராவ்

ஓர் ஊரில் ஒரு திருடன் இருந்தான். அவன் மிகவும் கெட்டிக்காரன். ஒரு நாள் அவன் வேறு பட்டணம் சென்று அங்கு திருடி இங்கு வந்து சுகமாக வாழலாம் என்று எண்ணி தன் மனைவியிடம் சென்று "நான் மதுரைக்குப் போகலாம் என்று இருக்கிறேன். எனக்கு கட்டுச்சோறு கட்டி கொடு. ஆனால் அதில் முக்கால் பாகம் அரிசியும் மீதி பாகம் சாதமும் ஆக இருக்கவேண்டும். சீக்கிரம் கொடு என்ருன். அவள் அதன் படியே ஒரு டிபன் பாக்ஸில் முக்கால் பாகத்திற்கு அரிசியும் மீதி சாதமும் ஆகக் கட்டிக்கொடுத்தாள்.

அவன் அதை எடுத்துக் கொண்டு 5, அல்லது 6 மைல் சென்ருன். அதனுல் களைப்புற்ற அவன் கட்டுச் சோற்றை கீழ் வைத்துக்கொண்டு ஒரு மரத்தினடியில் சயனித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கப்பால் அங்கு ஒரு மனிதன் வந்தான். அவன் இவன் படுத்திருப்பதைக் கண்டு அங்குள்ள கட்டுச்சோறை தின்ன அவாக் கொண்



டான். அங்கு சென்று அதைப் பிரித்துப் பார்க்க அதில் கொஞ்சமே சாதமிருப்பதைக் கண்டு இவன் [illegible]பலே ஆசாமி

இவனைக் கொண்டு நாம் பணம் சம்பாதிக்கலாம் என்று எண்ணி அவனை எழுப்பி நடந்ததை தெரிவித்தான்.

அவன் சொன்னான்—நானும் நீயும் ஒரு இடத்திற்குச் சென்று சம்பாதிக்கலாம். ஆனால் ஒருவரை ஒருவர் ஏமாற்றாமல் இருக்கவேண்டும் என்ன?- என்றுகேட்டான். அதற்கு அவன் சரி என்றான். பின் இருவரும் அடுத்த ஊருக்குச் சென்றனர். அங்கு ஒரு கிழவி வசிப்பதாகவும், வேறு யாரும் அங்கு இல்லை என்றும் அவளிடம் ஏராளமான சொத்து இருப்பதாகவும் இவர்கள் கேட்டனர்.

உடனே இவ்விருவர்களும் நேராகக் கிழவியிடம் சென்று "பாட்டி, நமக்கு ஏதாவது வேலை இருக்கின்றதா?" என்று கேட்டார்கள். கிழவி இளகிய மனம் உள்ளவள். அவள் சரி என்று சொல்லிவிட்டு தன்னிடமுள்ள பசுவை ஓட்டிவரவேண்டுமென்றும் சாப்பாடுதான் கிடைக்குமென்றும் கூறினாள். இருவரும் இவ் வேலையை மனக்கசப்புடன் இரண்டு மூன்று நாட்கள் செய்தனர்.

ஒரு இரவு சுமார் மணி 9-க்கு இருவரும் தாம் இனிமேல் செய்யப்போகும் விஷயத்தைப் பற்றி தனியாகப்பேசிக்கொண்டனர். இவ் விஷயத்தை கிழவி எப்படியோ தெரிந்து கொண்டு இவர்களை அடக்கவேண்டும் என்று இருந்தாள்.

ஒருநாள் இரவில் கிழவியானவள் தன்னிடமுள்ள பணம், காசு இவைகளை ஒரு பெட்டியில் போடுபவள் போல் கல், மண் முதலியவற்றை ஒரு பெட்டியில் போட்டு அதை



இரண்டு திருடர்களுக்கும் தெரியுமாறு பின் பக்கத்திலுள்ள கிணற்றில் போட்டாள். இருவரும் கிழவியை என்ன சப்தம்? என்று கேட்டதற்கு அவள் "இவ்வூரில் திருட்டு பயம் அதிகம். அதனால் என்னிடமுள்ள பணம், காசு இவைகள் பெட்டியில் போட்டு கிணற்றில் போட்டிருக்கிறேன்" என்றாள். இருவரும் நாம் வந்த காரியம் பலித்தது என்று சமயத்தை எதிர் பார்த்தனர்.

ஒரு நாள் நள்ளிரவில் இருவரும் கிணற்றண்டை சென்று அங்கு நின்றனர். "நீ கிணற்றில் இறங்கு. நான் உன்னை கிணற்றில் கயிற்றின் மூலம் இறக்குகிறேன். பின்பு நீ எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு கயிற்றை ஆட்டு. நான் உன்னை இழுக்கிறேன் பின்பு நீயும் நானும் பணத்தை பங்கிட்டுக் கொள்வோம்" என்றான். ஒரு திருடன். அவனும் அதற்கு சரி என்றான்.

பின்பு ஒரு திருடன் கயிற்றை பிடித்துக் கொண்டு கீழ் இறங்கினான் "அப்பொழுதுமேலிருந்தவன் எணணினான் முதலில் அவன் பெட்டியை தான் ஏற்றுவான். நாம் அதை எடுத்துக் கொண்டு இவனை இங்கேயே விட்டு விடுவோம்" என்று கீழிறங்கியவன் பெட்டியை அடைந்து அதைத் திறந்து பார்க்கையில் வெறும் கல் மண் இருப்பதைக் கண்டு "ஓகோ! நாம் இப்பொழுது பெட்டியைஅனுப்பி விட்டால் நமது கதி அதோ கதிதான். ஆகையால் இவைகளை அப்புறப்படுத்தி நான் இதில் உட்கார வேண்டும்" என்று எண்ணி, அவைகளை அப்புறப்படுத்தி பெட்டியினுள் தான் உட்கார்ந்து கயிற்றை ஆட்டினான். மேலிருந்தவன் கயிறை பிடித்து இழுத்தான். அதிகபளுவாயிருந்தது. இழுக்க முடியவில்லை, "ஓஹோ! இதில் அதிகமாக பணம் நகைகள் இருக்கின்றன. அதனால்தான் இவ்வளவு பளு என்று ஒரு பக்கம் சந்தோஷமும், ஒரு பக்கம் கஷ்டமும் சேர்ந்து பின் வெகு சிரமப்பட்டு அதை ஏற்றி தோளின் மீது சுமந்து கொண்டு, தனது நண்பனை கிணற்றிலேயே விட்டுவிட்டோம் என்ற சந்தோஷத்துடன் சென்றான். வழியில் அதை இறக்கிவிட்டு தண்ணீர் குடிக்க அருகிலிருந்த ஆற்றுக்குச் சென்றான். இதுதான் சமயம் என்று உள்ளிருந்த திருடன் வெளிவந்து தானும் தண்ணீர் குடிக்கச் சென்றான். "அண்ணா, என் இவ்வளவு அவசரமாக தண்ணீர் குடிக்கிறாய்? பெட்டியை யாரும் எடுத்துப் போகமாட்டார்கள்" என்றான். பின் இருவரும் தாம் செய்ததை எண்ணி ஒரு பொருளும் இல்லாமல் தங்கள் தங்கள் ஊருக்குச் சென்றார்கள்.

சுதேசமித்திரன்

வாரப்பதிப்பு

## சென்ற வார நிகழ்ச்சிகள்

### சென்னையில் ஜனுப் ஜின்னு

இம்மாதம் 14-ந் தேதி காலே சென்னையில்ஜின்னுபாதில்கூடிய முஸ்லீம் லீக் மகாநாட்டில் ஜனுப் ஜின்னு தமது தலைமைப் பிரசங்கத்தை நிகழ்த்தினர். சுமார் 2 மணி நேரம் அவர் பேசினர்.

தமது பிரசங்கத்தில் அவர் ஹிந்துக்கள் முஸ்லீம் லீகுக்கு எதிராகச் செய்துவரும் 'தவருன பிரசாரத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தார். பாகிஸ்தானே முஸ்லீம் லீகின் இறுதி லக்ஷியமானுலும் அதைத் தாங்கள் உடனே கேட்பதாகச் சொல்வது தவறென்று அவர் கூறினர்.

* * *

### டாக்டர் சாப்ரூ விளக்கம்

இம்மாதம் 8-ந் தேதி காலே டாக்டர் சாப்ரூ பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குப் பேட்டி அளித்துப் பேசுகையில் தாம் வைஸ்ராயை இரண்டு தாம் கண்டு பேசியதைப் பற்றி குறிப்பாக சில வார்த்தைகள் சொன்னர்;

மேலும் அவர் சொன்னதாவது:—

எங்களிருவருக்குமிடையே நடந்த சம்பாஷணையின் விவரத்தை வைஸ்ராய் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இந்தியா மந்திரிக்கும் சீக்கிரத்தில் அறிவிப்பார். நான் பம்பாய் தீர்மானத்தை வற்புறுத்திப் பேசினேன்—அதனை விளக்கியும் சொன்னேன். அவர் குறிப்பாக என்ன சொன்னுரென்பதை நான் வெளிப்படையாக இப்போது சொல்வது தர்மமல்ல—அவர் அநுதாபத்துடனும் சினேகபாவத்துடனும் பேசினர் என்பதை மட்டும் நான் சொல்லக்கூடும்.

* * *

## ஐரோப்பியர் செய்திகள்

### நாஸி பாராசூட் துருப்புகள்

ஜெர்மனியர் ஆகாயத்திலிருந்து பாராசூட் துருப்புகளை மழைபோல் பொழிவதன் மூலம் "அல்பேனியாவிலுள்ள இத்தாலியருடன் தொடர்பு ஏற்படுத்த முயன்று வருவதாக பெர்லினிலுள்ள ஒரு நிருபர் தெரிவிக்கிருர்.

* * *

### ஸலோனிகா வீழ்ச்சி

ஜெர்மன் துருப்புகள் இம்மாதம் 9 காலே 4-மணிக்கு ஸலோனிகாவுக்குள் பிரவேசித்து, அதை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டனவென்று திண்ணமாகத் தெரிகிறது.

ஜெர்மன் படைகளுடன் பல்கேரியத் துருப்புகளும் சேர்ந்து யுகஸ்லேவியாவைத் தாக்கியதாக இங்குள்ள யுகஸ்லேவிய ஸ்தானீகர் துருக்கி சர்க்காரிடம் தெரிவித்திருக்கிருர்.

* * *

### குரோடியா ஒரு சுதந்திர ராஜ்யமாம்

ஜெர்மனியர் ஸாக்ரப் நகரைக் கைப்பற்றியதன் பேரில், குரோடியா என்ற யுகஸ்லேவிய மாகாணம் இனி ஒரு சுதந்திர ராஜ்யமாக இருக்குமென்று ஒரு பிரகடனம் வெளியானதாக ஜெர்மன் சர்க்காரின் செய்தி ஸ்தாபனம் அறிவிக்கிறது.

* * *

### பல்கேரியாவுக்குப் பங்கு

புடாபஸ்டிலிருந்து கிடைத்த ஒரு செய்தி கூறுவதாவது:—

பல்கேரியர் யுகோ பிரதேசத்துக்குள் புகுந்து, சென்ற யுத்தத்துக்கு முன்பு அங்கு பல்கேரிய எல்லே இருந்த பகுதிவரை ஆக்கிரமித்துக் கொள்ளக்கூடுமென விஷயம் தெரிந்தவர்கள் கூறுகின்றனர். சென்ற யுத்தத்தின்பொழுது யுகஸ்லேவியர் கைப்பற்றிய ஸ்ட்ருமிகா பிரதேசமும் அப்பகுதியில் சேர்ந்ததாகும். பல்கேரியாவின் நடத்தை ஹங்கேரியின் போக்கைப் போன்றதேயாகும்.

* * *

### ருமேனியர் ஆசை

ருமேனியாவும் இப்பொழுது யுகஸ்லேவியாவில் பங்கு கேட்க முன் வந்துவிட்டது.



சமீபத்தில் காலஞ் சென்ற கொச்சி மஹாராஜா ஸர் ஸ்ரீ ராம வர்மா. இவர் வயது 80. இவர் 9 வருஷம் ராஜ்யபாரம் வஹித்து அநேகம் சீர்திருத்தங்களை நிறைவேற்றி வைத்தார்.



யுகோவிலுள்ள ருமேனிய மைனரிட்டி துன்புறுத்தப்படுவதாக ருமேனியப் பத்திரிகைகள் திடீரென புகார் செய்யக் கிளம்பியிருக்கின்றன.

* * * *

### பெல்கிரேடில் ஜெர்மன் படை

ஜெர்மன் துருப்புகள் (தற்காப்பு வசதியற்ற) பெல்கிரேட் நகருக்குள் பிரவேசித்து விட்டதாக பெர்லின் ரேடியோ அறிவிக்கிறது.

"யுகஸ்லேவியப் படைகளில் பெரும்பாலானவை மலைப் பகுதிக்குப் பின் வாங்கிவிட்டன. அங்கு அவை தங்களுக்கு டால்மாடியக் கரையிலிருந்து தளவாடங்கள் கிடைக்கும்வரை எதிரிகளுடன் போராட்டம் நடத்தி வாக்கூடும்.

* * * *

### கிரேக்க மன்னரின் பிரகடனம்

கிரீஸ் மன்னர் ஜார்ஜ் வெளியிட்டுள்ள ஒரு பிரகடனத்தில் தமது துருப்புகள் வீரத்துடன், தங்கள் கட்சியின் நியாயத்திலும், இறுதியான வெற்றியிலும் பூர்ண நம்பிக்கை கொண்டு போராடுவதைப் பாராட்டியுள்ளார்.

கிரீஸிலுள்ள பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகள் இன்று வெளியிட்ட அறிக்கையிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகளும், ஜெர்மன் படைகளும் சந்தித்து விட்டதாகத் தெரிகிறது.

* * * *

### மிஸ்டர் சர்ச்சில் பிரசங்கம்

இம்மாதம் 9-ந்தேதி மிஸ்டர் சர்ச்சில் யுத்த நிலைமை பற்றி ஒரு நீண்ட பிரசங்கம் செய்தார்.

"பிரிட்டிஷார் மஸாவாவைப் பிடித்து விட்டனர். ஜெர்மனியர் இன்று காலே ஸலோனிகாவுக்குள் பிரவேசித்தார்கள். கிரீஸிலுள்ள பிரிட்டிஷ் சாம்ராஜ்யப்படை இதுவரை எதிரிகளுடன் கைகலக்க வில்லை.

மிஸ்டர் சர்ச்சில் மேலும் பேசுகையில் ஜெர்மன் நகரங்கள் மீது பிரிட்டிஷ் விமானங்கள் மிகக்கடுமையாகக் குண்டுகளைப் பொழிந்து வருவதாகக் கூறினர்.

இப்பொழுது அட்லாண்டிக் யுத்தமே மிகவும் முக்கியமானதென்றும், பிரிட்டனுக்கு மிகப் பெருவாரியான கப்பல் சேதம் ஏற்பட்டு வருகிறதென்றும் இதே முறையில் காலவரையின்றி சேதமேற்பட்டு வர இடங்கொடுப்பதற்கில்லையென்றும் அவர் கூறினர்.

அட்லாண்டிக் போராட்டத்தில் பிரிட்டிஷ் கடற்படை ஐரிஷ் துறைமுகங்களையும், விமான நிலையங்களையும் உபயோகித்துக்கொள்ள அநுமதிக்குமாறு மிஸ்டர் சர்ச்சில்

வாரப் பதிப்பு

சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

கீழ்கண்டவாறு சந்தா விகிதம் மாற்றப்பட்டிருக்கிறது. இனிமேல் அதன்படி சந்தாவைச் செலுத்துமாறு கேட்டுக்கொள்ளுகிருேம்.

இந்தியா இலங்கை
தபால் மூலமும், ஏஜண்டு மூலமும்,

| | ரூ. அ. |
|---|---|
| 1 வருடம் | 6—8 |
| 6 மாதம் | 3—4 |
| 3 மாதம் | 1-12 |
| தனிப்பிரதி | 0—2 |

3 மாதங்களுக்குக் குறைந்து சந்தா ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.

| | |
|---|---|
| பர்மா வருட சந்தா | 8—0 |
| வெளிநாடு ,, | 13—0 |

1 வருடத்திற்குக் குறைந்து சந்தா ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.



ராவ்பஹதூர் என். சந்திரசேகர அய்யர். சேலம் ஜில்லா ஜட்ஜாக விருக்கும் இவர் ஜூலை மாத மத்தியிலிருந்து இரண்டு வருஷகாலத்திற்கு சென்னை ஹைக்கோர்ட்டு அடிஷனல் ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருக்கிறார். (பி. பி. பி.)

ஐரிஷ் சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டார். அமெரிக்கர் தாங்கள் சிரமப்பட்டு செய்தனுப்பும் தளவாடங்கள் கடலில் மூழ்கவிடமாட்டார்களென்பது திண்ணமென்றும், அவர்கள் ஏற்கனவே பிரிட்டனுக்கு 10 சிறிய யுத்தக் கப்பல்களைக் கொடுத்து உதவியிருக்கின்றன ரென்றும் கூறினார்.

ஹிட்லர் எந்த சமயத்திலும் பிரிட்டன் மீது படையெடுக்கக் கூடுமென்றும், துருக்கியின் மீதும் அவர் பாயலாமென்றும் ஹிட்லர் உக்ரேனையும் காகாஸஸ் எண்ணெய் பிரதேசத்தையும் கைப்பற்ற உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறதென்றும் மிஸ்டர் சர்ச்சில் தெரிவித்தார்.

* * * *

### சீனாவின் உறுதி

சீனத் தூதரான மிஸ்டர் கோதாய்ச்சி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் வெற்றி கிட்டும் வரையில் போராட சீனா உறுதிகொண்டிருப்பதாகவும், தித்திக்க உறுதிமொழிகள் வழங்கப்படுவதைக் கண்டோ அல்லது ராணுவ நிர்ப்பந்தம் கண்டோ அது தளர்ந்துவிடாதென்றும் கூறியிருக்கிறார்.

* * * *

### ரஷ்ய-ஜெர்மன் நேசம்

ரஷ்யாவும் ஜப்பானும் ஒரு நடுநிலைமை ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ளன.

இவ்வொப்பந்தம் நான்கு பிரிவுகளைக் கொண்டதாகும்.

முதலாவது பிரிவின்படி இரு தரப்பினரும் தங்களிடையே சமாதான நேச உறவு கொண்டிருக்கவும் பரஸ்பரம் பிரதேச உரிமைகளை மதித்து நடக்கவும் ஒப்புக்கொண்டிருக்கின்றன.

இரண்டாவது பிரிவின்படி இவ்விரு தரப்பினரில் ஒருவர் வேறு நாடுகளால் தாக்கப்படுவாராயின் அந் நிலைமையில் மற்ற தரப்பினர் அந்த யுத்தம் நீடித்திருக்குமளவும் நடுநிலைமை வகித்து வருவர்.

ஐந்து வருஷ காலம் இது அனுஷ்டானத்திலிருக்கும்.

* * * *

### பார்டியா ஜெர்மன் வசம்

டாப்ருக்கைச் சுற்றிவந்த விரோதி யந்திர சாதனப்படை இம்மாதம் 12-ம் தேதியன்று பார்டியாவை வசப்படுத்திக் கொண்டதாக நன்கு விஷயம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

* * * *

### ஹங்கேரி—பிரிட்டிஷ் உறவு ரத்து

பிரிட்டிஷ் சர்க்கார் புடாபஸ்டிலுள்ள தங்கள் ஸ்தானீகரைத் திரும்ப வழைப்பதென்று முடிவு செய்து விட்டதாகத் தெரியவருகிறது.

எதிரிப் படைகள் தங்களுடைய போர் நடவடிக்கைகளுக்கு ஹங்கேரியை ஒரு தளமாக உபயோகித்து வருவதை முன்னிட்டு புடாபஸ்டிலிருந்து திரும்பி விடுமாறு அங்குள்ள பிரிட்டிஷ் ஸ்தானீகரான மிஸ்டர் ஓவன் ஓமாலிக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.









(இடது)

மாதுங்காவில் இருக்கும் தென்னிந்தியர் ஸ்ரீராம நவமியன்று சுமார் 2000 ஏழைகளுக்கு அன்னமளித்தனர். பி. பி. எ.

(மேல் படம்) வேப்பேரி ரிக்ரியேஷன் கான்வெண்ட் மாணவிகள், ''ஜுரிகா'' என்ற நாடகத்தை நடித்தனர். பி. பி. பி.
(நடு) 1. பம்பாயில் ஒரு காதிப்பொருட் காட்சியை ஸ்ரீ மஹாதேவதேசாய் திறந்து வைத்தார். (பி. பி. எ.) 2. காலஞ்சென்ற ராவ்பஹதூர் ஆர். சத்யமூர்த்தி அய்யர். சென்னை ஹைக்கோர்ட்டில் மாஸ்டராக இருந்த இவர் வருமானவரி அப்பீல் விசாரணை சபை மெம்பராக இந்திய ஸர்க்காரால் நியமிக்கப்பட்டார். —(பி. பி. பி.)

Regd. No. 2514



Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A. at the Swadesamitran Power Press, Mount Road, Maras.—*Editor* C. R. Srinivasan, B. A